அருணா வெளியீடு : கூ

# கவிமணி

ஆக்கியோர் :

வித்துவான் பா. சொக்கலிங்கம்
கவிஞர் தே. ப. பெருமாள்

அருணா பப்ளிகேஷன்ஸ்
தியாகராயநகரம் :: சென்னை-17

## பதிப்புரை

கவிமணி என்ற பெயரைக் கேட்டதும் தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் முதல் கற்ற பெரியோர்வரை புனிதமுடன் பாராட்டுகின்றனர்; அன்பில் தோய்ந்த உறவும் உரிமையும் காட்டுகின்றனர்; புத்துணர்வும் இன்பமும் பெறுகின்றனர்;

உள்ளத்தைக் கவர்ந்து தன் இனிய பண்பிலே மக்கள் அனைவரையும் வசப்படுத்திக்கொள்ளும் தெய்வீகப் பண்பு கவிமணியின் பாடல்கள் ஒவ்வொன்றிலும் நிறைந்திருக்கின்றது.

பாடலைப் போல அவர்கள் பிறரோடு பழகும் பண்பும், பிறரிடம் காட்டும் அன்பும் புனிதமானவை, தூய்மை மிகுந்தவை, இனிமை நிறைந்தவை.

அத்தகைய பெரியோரின் வாழ்வினை அருகினில் இருந்தே கண்டு பழகிய வித்துவான் பா. சொக்கலிங்கம், கவிஞர் தே. ப. பெருமாள், இருவரும் மிகவும் அருமையாக எழுதியுள்ளனர்.

கவிமணியின் தேனினும் இனிய தீந்தமிழ்ப் பாடல் அமுதுண்டு களித்த தமிழ்கூறு நல்லுலகம் இதனை ஆர்வமுடன் வரவேற்கும் என்பது எங்கள் எண்ணம்.

'அருணா பப்ளிகேஷன்ஸ்'

# பொருளடக்கம்

# 1. கவிஞன் பிறந்தான்

பாரத நாட்டின் தென் எல்லையை அழகுறச் செய்து விளங்குவது கன்னிமாகுமரி என்னும் கடல் துறையாகும். 'வடவேங்கடம் தென் குமரி' எனப் பனம்பாரனர் என்பவரால் பாடப்பெற்ற இக்குமரியில் முக்கடல்களும் கூடும் இனிய காட்சியைக் கண்டு களிக்கலாம். ஆழ நெடுங் கடல்களின் அலைகள் அருகேயுள்ள பாறைகளில் மோதி வெண்ணுரை சிதறி வீழும் தோற்றம் கண்ணையும் கருத்தையும் கவர்வதாகும். குமரியின் கடற்கரையருகே கன்னித் தெய்வம் கடுந்தவம் புரிந்து தமிழகத்தைக் காத்து நிற்கின்றாள். முத்தமிழ் வளர்ந்த பழந்தமிழகத்தின் பல பகுதிகளைக் கொடுங்கடல் மூன்றுமுறை கொள்ளை கொண்டது. பரந்துபட்ட தமிழ் நகரங்கள் பல கடலுக்கு இரையாய் மறைந்தன. தமிழரது அரும்பெருங்கலைகள் அழிந்தன. சிறந்த நாகரிகம் செழித்தோங்கி நின்ற செந்தமிழகத்தின் பெரும் பகுதி நீரினுள் மூழ்கியது. இந்நிகழ்ச்சியைப் பழந் தமிழ் இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன.

> "பஃறுளி யாற்றொடு பன்மலை யடுக்கத்துக்
> குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"

என இளங்கோவடிகள் உள்ளம் நொந்து கொடுங் கடல் எனப் பேசுகிறார். தமிழ்ச்சுவை அறிந்த கருங்கடல் கன்னித் தமிழகத்தை இன்னும் கவராத வாறு கையமர்த்திக் காவல் செய்கின்றாள் குமரித் தெய்வம். இத் தோற்றத்தைக் காலஞ்சென்ற தேசீயக் கவிஞர் பாரதியார்.

"நீலத் திரைக்கடல் ஓரத்திலே நின்று
நித்தம் தவம் செய் குமரி எல்லை"

எனப் பண்ணொழுகப் பாடுகிறார்.

இத்தகைய குமரியைத் தன்னகத்தே கொண்டது நஞ்செய் மலிந்த நாஞ்சில் நாடு. நாஞ்சில் என்பது உழு கருவியாகிய கலப்பையைக் குறிப்பதாகும். 'நாஞ்சில் அல்லது படையும் அறியார்' என்பது புறநானூற்றின் அடியாகும். நாஞ்சில் நாடு பழந்தமிழ் நாட்டின் ஒரு பகுதியாய் விளங்கியது. பாண்டியர் ஆட்சியிலும் சேரர் ஆளுகையிலும் இப்பகுதி கிடந்து தத்தளித்த வரலாற்றை இலக்கியங்களும் கல்வெட்டுக்களும் எடுத்துக் கூறுகின்றன.

நாஞ்சில் நாட்டை வள்ளுவன் என்பான் ஆண்டு வந்தான். இவன் பாண்டிய மன்னனின் படைத் தலைவனாக இருந்தவன். இவனது மலைவளமும், நில வளமும், ஆட்சித் திறமையும், அரசியல் நுட்பமும் வீரமும் தீரமும் புறப்பாட்டிலே காணலாம். கால மாறுபாட்டால் சேர நாட்டின் ஒரு பகுதியாய் மலையாள ஆட்சியில் அடங்கி வாழும் இப்பகுதியில் தமிழர் இன்றும் தம் மரபு குன்றாது வாழ்கின்றனர்.

கொடுமலையாளம் குடிபுகுந்த பின்னரும் பைந்தமிழ் அன்னைக்கு அவர்கள் பணிபுரிந்து வருகின்றனர்.

நாஞ்சில் நாட்டின் நடுநாயகமாய் அமைந்தது புத்தேரி என்னும் சிற்றூர். இவ்வூர் அமைதியும் அழகும் அமைந்த ஊர். புத்தேரியைச் சுற்றிலும் கண்ணுக் கெட்டாத எல்லை வரையிலும் பச்சைப் பசேலெனப் பரந்து கிடக்கும் வயல்வெளிகள். அதனைச் சூழ்ந்து ஓங்கி உயர்ந்த மலைகளின் வரிசை. அருகே பரந்து விரிந்து நீர் நிறைந்த ஏரி. அதன் அருகே அல்லியும், ஆம்பலும், குவளையும், கொட்டியும், ஒட்டிப் பிணைந்து மலர்ந்து சிரிக்கும் இனிய தோர்குளம். இடையிடையே கனிதரும் சோலைகள். பறவைகளின் பாட்டொலி. பகற்பொழுதில் கன்று காலிகளைப் பசும் புல்வெளியில் மேய்த்து நிற்கும் இளஞ்சிறுவர்களின் களங்கமற்ற தெம்மாங்கு.

இவ்வாறு இயற்கை அன்னை கொலுவீற்றிருக்கும் புத்தேரியிலேயே கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை வாழ்ந்துவந்தார். இவரது முன்னையோர் நாகபட்டினத்தே பன்னெடுங் காலமாய்க் கடல் வாணிபம் செய்தவர்கள். திரைகடல் ஓடித் திரவியம் தேடியவர்கள். உலையா உழைப்பும் உயர்ந்த பண்பும், செந்தமிழன்பும் படைத்தவர்கள். இத்தகைய மரபிலே வந்த சீரிய குணமுடைய சிவதாணு பிள்ளைக்கும் அருங்குணத்து ஆதிலட்சுமி அம்மையார்க்கும் மகவாய் நாஞ்சில் நாட்டுத் தேரூரில் 1876-ம் ஆண்டில் கவிமணி பிறந்தார். பெற்றோர் தம் 'குலதெய்வ'த்தின் பெயராய 'தேசிக விநாயகன்' என்ப

தைப் பிள்ளைக்குச் சூட்டி உள்ளம் களித்தனர். தந்தை சிவதாணு பிள்ளை தமிழும் ஆங்கிலமும் அறிந்தவர். மேலைநாட்டுக் கல்வி பெரிதும் பரவாத அந்நாளில் நாஞ்சில் நாட்டில் ஆங்கிலம் கற்றவர் அவர். அன்றியும் உப்பளத்து விசாரணை அதிகாரி யாக உத்தியோகமும் வகித்து வந்தார்.

## 2. பிள்ளைப் பருவமும் பள்ளிப் படிப்பும்

'எண்ணும் எழுத்தும்' கண்ணெனத்தகும் என்பதனை வாழ்வில் நன்கு அறிந்தவர் சிவதாணு பிள்ளை. எனவே 'இளமையிற்கல்' என்பதற்கேற்பத் தேசிக விநாயகரை ஐந்தாண்டிலேயே பள்ளிக்கு அனுப்பினர். 'மகன் அறிவு தந்தை யறிவு' என்பதற் கேற்ப கூரிய அறிவு படைத்த அவரும் ஆசானைச் சார்ந்து பாடங்களை அமைவுறக் கற்றூர். ஆசிரியர் மெச்சி அகங்குளிர எந்நாளும் மாசிரியக் கற்றுவந்த மாணவராய் விளங்கினர்.

தேசிக விநாயகரின் ஆரம்பக் கல்வி கோட்டாறு எனும் சிற்றூரிலேயே வளரலாயிற்று. இவரது கலை யார்வத்தையும் நுண்ணிய மதியையும் கண்டு மகிழ்ந்த தந்தையார் ஆங்கிலக் கலாசாலைக்கு இவரை அனுப் பினர்.

மலையாள ஆட்சிக்குட்பட்டிருக்கும் நாஞ்சில் நாட்டிலே அந்நாளில் பள்ளிகளில் எல்லாம் மலை யாளமே தலைவிரித்தாடியது. எனவே ஆரம்பத்தில்

அம் மொழியையே கவிமணியும் கற்ருர். கலாசாலை யில் பயின்றது மலையாளமாயினும் அவர் மனத்திலே வளர்ந்தது அருந்தமிழ் மொழியே யாகும்.

தேசிக விநாயகர் பிறந்த தேரூருக்கும் கல்வி பெற்ற கோட்டாற்றுக்கும் ஏறக்குறைய நான்கு மைல் தூரம் உண்டு. அவரது இளம் பருவம் நாள் தொறும் நான்கு மைல் நடந்து செல்ல இடந்தர வில்லை. ஆதலின் அவரது பெற்ருேர் கோட்டாற் றிலே கலாசாலை அருகே ஓரில்லத்தில் தங்கி மைந் தனது கல்வியைக் கண்ணும் கருத்துமாய்ப் பேணி வந்தனர். தந்தை மகற்கு ஆற்றும் உதவி அதனி னும் பெரிது உண்டோ !

ஆரம்பப் பள்ளிப் படிப்பை முடித்ததும் தேசிக விநாயகர் ஆங்கிலக் கலாசாலையில் சேர்ந்தார். அந் நாளில் நாடெல்லாம் வழக்கிலிருந்த மெட்ரிகுலேஷன் எனும் தேர்வில் அவர் வெற்றி பெற்ருர். பின்னர் நாகர் கோவிலிலுள்ள ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரியில் சேர்ந்து பயிலலானுர்.

பள்ளியிலும் கல்லூரியிலும் அவர் படித்து வந்த காலத்தே இயற்கை அழகைக் கண்டு களிக்கும் இயல்பு அவரிடத்தே இருந்தது. ஓங்கி உயர்ந்த மரங் களையும், வானுற நிமிர்ந்த மலைகளையும் பார்த்துமகிழ் வார். கொத்துக் கொத்தாய்ப் பூத்துக் குலுங்கும் மலர்களைக் கண்டு உள்ளம் குளிர்வார். ஓடும் ஓடை களையும் பாடும் அருவிகளையும், இன்னிசை மிழற்றும் ஆறுகளையும் பார்த்து இன்புறுவார். வண்ணச் சிற

கடித்து விண்ணிற் பறக்கும் பறவைகளும் துள்ளி விளையாடும் விலங்கினங்களும் கண்டு சிந்தை களிப்பார். காலைக் கன்னியின் பொன்னெழில் கண்டு வாழ்த் திசைக்கும் பறவைகளின் இன்னிசைக் குரலில் அவர் இதயம் மயங்கி நிற்கும். அமைதியிலும், தனிமையிலும் அவர் உள்ளத்தே கவிதை வெள்ளம் ஊற்றெடுத்துப் பொங்கும். கல்லூரியில் தேசிக விநாயகர் சேர்ந்த காலத்து, பிறந்த தேரூருக்கு மீண்டும் சென்று விட்டார். சிற்றூராகிய தேரூரிலிருந்து நாகர்கோவில் கல்லூரிக்கு வயல் வெளிகளைக் கடந்து அவர் நடந்து செல்லுங்கால் இயற்கை அன்னையின் திருநடனம் கண்டு அவரது வாய் பாடலை மிழற்றும். எழுந்த கவிதையின் சில அடிகளை எண்ணிக் கொண்டே கல்லூரி வகுப்பை அடைவார். வகுப்பிலே பாடங்களில் வழக்கம்போல் அவர் சிந்தை செல்லும் ; மாலை எப்போது வரும் என இடையிடையே அவர் இதயம் ஏங்கி நிற்கும். அந்திவான் செக்கரின் அழகையும், பசும் புல்லின் பச்சைக் கவினையும், கூடு நோக்கிக் கூவிச் செல்லும் புள்ளினங்களின் கூட்டத்தையும் காண அவரது இதயம் அவாவி நிற்கும். கல்லூரி வகுப்பு முடிந்ததும் அவர் கண்ணையும் கருத்தையும் இயற்கை அன்னை கவர்ந்து நிற்பாள். சிந்தையிலே செந்தமிழ்க் கவிதை மலரும் ; வாய் அதனை மெல்லென மிழற்றும். இல்லம் வந்து சேரும்போது கவிதை மலர்ந்து அறிவொளி வீசி இன்பத்தேன் சுரந்து நிற்கும். இங்ஙனம் அவரது கல்லூரி வாழ்வின் காலையும் மாலையும் கவினுறக் கழிந்தன.

# 3. முத்தமிழ்க் கல்வி

சிற்றூராகிய தேரூரின் வடபால் பெரியதோர் குளமுண்டு. ஊரிலுள்ள மக்கள் பலர் மாலை வேளையில் அக்குளக்கரையில் உலவிவருவர். தண்ணீரில் தவழ்ந்து விளையாடிவரும் மெல்லிய தென்றல் மக்களது தளர்ச்சியையும் அயர்ச்சியையும் மாற்றும். பொன்னிறக் கதிர்கள் அலைகளில் ஆடிப் புன்னகை செய்து காண்பவருக்கு இன்பம் பொழிந்து நிற்கும்.

இக்கரையிலே ஒரு நாள், தேசிக விநாயகர் வானையும் குளத்தையும் பார்த்து அமர்ந்திருந்தார். மாலைக் கதிரவன் மலைவாயிலிலே தனது செங்கதிர்களைச் சுருக்கிக்கொண்டு மறையலானான். குங்குமக் குடங்கள் உடைந்து வான வீதியில் சிதறியதுபோலச் செக்கர்வானம் திகழ்ந்தது. வெண்மேகங்களின் விளிம்புகளிலே பொன்னூரம் பொலிந்து நின்றது. தங்க உருளை சுழல்வதுபோலக் கதிரவன் கறங்கி விரைந்தான். பொன்னூலாய கதிர்கள் சூரியனைச் சுற்றிப் பொலியும் காட்சியிலே பறவையினங்கள் தம்மை மறந்து பாட்டிசைத்தன. ஞாயிற்றின் நல்லழகைக்கண்டு நாணிய இளம்பிறை கீழை வானிலே வெளிரி நின்றாள். சோலை வண்டுகளின் ரீங்காரமும் பயிர்க்கூட்டத்தினின்றெழும் 'இழும்' எனும் இன்னிசையும் அம்மாலைப்போதை இன்பமயமாக்கின. இத்தகைய இயற்கைக் காட்சியைக் கண்டு, தன்னை மறந்தவராய் இளம்பருவத்துத் தேசிய விநா

யகர் இருந்தார். அவ்வமயம் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த சாந்தலிங்கத் தம்பிரான் அங்கு வந்து சேர்ந்தார். தேசிகவிநாயகர் அமர்ந்திருந்த கோலமும், இயற்கையில் அவரது கண்ணும் மனமும் கலந்துநின்ற காட்சியும், களங்கமற்று விளங்கும் அவரது மாசிலா வதனமும் தம்பிரான் மனத்தைக் கவர்ந்தன. மாலை அழகில் மயங்கிநின்ற இளைஞர் தேசிகவிநாயகர் அருகே தம்பிரான் வந்து சேர்ந்தார். அவரது வரவால் நினைவுகலைந்த தேசிக விநாயகர் விரைந்து எழுந்தார். தலை தாழ்த்திக் கரம் குவித்து வணங்கினர். அடக்கமும் பணிவும் அமைந்த அவரைக் கண்ட தம்பிரான் புன்னகை பூத்த முகத்துடன் 'அப்பனே நீ யார்' என்றார். தேசிக விநாயகனுர் இனிமை தவழும் மொழிகளில் தன் தந்தையார் பெயரைக் கூறினர். புகழ்பட வாழ்ந்த சிவதாணுபிள்ளையின் பெயரைக் கேட்டதும் தம்பிரான் வேறு அறிமுகத்தை விரும்பவில்லை. அன்புடன் அவரோடு உரையாடினர். தனது மடத்திற்கு வருமாறு அவரை ஆர்வமுடன் அழைத்தார். அன்றுமுதல் தேசிக விநாயகர் தம்பிரானின் மாணவராயினர்.

சாந்தலிங்கத் தம்பிரான் தமிழில் ஆழ்ந்த அறிவும் பரந்த ஞானமும் படைத்தவர். இலக்கண இலக்கியங்களை இனிது பயின்றவர். தருக்க சாத்திரத்தை நன்கு உணர்ந்தவர். வேதாந்த சித்தாந்தத்தை விளங்கக் கற்றவர். இத்தகைய துறவி தமிழ் கற்கத் தக்கதொரு மாணவன் தமக்கு வாய்த்தான் என எண்ணி மகிழ்ந்தார். தேசிகவிநாயகரோ

மாசற்ற ஆசிரியரைத் தாம் செய் 'தவத்தால்' பெற்ற தாக நினைத்துப் பெருமித முற்றார். காலம் கிடைக்கும் போதெல்லாம் தம்பிரானைக் காண வருவார். அவப் பொழுது போக்காது தவப்பொழுதாய்த் தம் காலத் தைக் கழிப்பார். தம்பிரானிடம் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றார். வேதாந்த சித்தாந்தத்தை விரிவாக உணர்ந்தார். சமய நூல்களைச் சாந்தலிங் கத்தம்பிரான் அழகுற அவருக்குக் கற்பித்தார். ஆசாற்சார்ந்து அமைவரக்கேட்டு அருந்தமிழ்ப் புலமையும் சமய நல்லறிவும் அவர் பெற்றார். தம்பி ரானிடம் தேசிகவிநாயகர் பாடங் கேட்ட வரலாறு கேட்டு வியக்கத்தக்கதாகும். முனிவர்பெருமான் முதல்நாள் செய்யுட்களைக் கற்பிப்பார். படித்தபாடல் களை மறுநாள் பிழையின்றித் தேசிக விநாயகர் மனப் பாடஞ்செய்து ஒப்பித்துவிடுவார். பாடல்களை மன னஞ் செய்வதில் தன்னிகரற்றவராய்த் தேசிக விநாயகர் திகழ்ந்தார். அத்திறமையை அவர் நினை வாட்சியின் ஏதுவாலும், ஒருமையுளத்தாலும், சிந்தையடக்கும் திறத்தாலுமே பெற்றார்.

தேரூரின் தெற்கே ஒரு மைல் தூரத்தே சுசீந் தரம் எனும் ஊர் ஒன்று உள்ளது. சோழ மன்னனால் கட்டப் பெற்ற ஆலயம் அங்கே வானுற வளர்ந்து தமிழரின் சிற்பக்கலைக்குச் சான்று பகர்ந்து நிற்கும். திருவிதாங்கூர் தேசத்தே வேறு எவ்விடத்தும் காணரிய ஆலய அமைப்பும், கோபுரத்தின் அழகும் இங்கேதான் காணவியலும். கன்னிமாகுமரி நோக் கிச் செல்லும் மக்களின் கண்ணுக்கு வழியிலே காட்சி யளிப்பது சுசிந்தை ஆலயம். இங்கு ஆண்டு

தோறும் சிவராத்திரி விழா திருவாவடுதுறை மடத்தின் ஆதரவில் நடைபெறும். அன்று ஆண்டவனுக்கு நிவேதிக்கப்படும் பல்வகைப் பண்டங்களும் தேரூர் மடத்துக்கு மறுநாள் அனுப்புதல் வழக்கம். தம்பிரான் அவர்கள் அந் நிவேதனப் பொருளால் அருந் தமிழை வளர்க்கலானார். செந்தமிழ்ச் செய்யுட்களைத் தம்பிரான் சொல்லுவார். இளைஞர்கள் கேட்டுக் கொண்டு இருக்கவேண்டும். அடிகளார் கூறும் போது இளைஞர் கண்கள் ஏட்டிலே ஊன்றி நிற்க வேண்டும். பாடல்கள் முடிந்ததும் ஏடுகள் மூடப் படும். படித்த பாடல்களைப் பாராது ஒப்பிக்க வேண்டும். இத்துறையில் வெற்றி பெற்றோர்க்கு நிவேதனப் பண்டங்களைத் தம்பிரான் வாழ்த்துடன் வழங்குவார். இத் தேர்விலே தேசிக விநாயகர் எண்ணிறந்த முறை வெற்றி பெற்றார். தின்பண்டங் களால் தீந்தமிழ் வளர்த்த தம்பிரானைத் தமிழுலகம் என்றும் மறவாதன்றோ!

இளம் பருவத்திலேயே தேசிக விநாயகரிடம் எளிமையும் அடக்கமுந் தவழ்ந்தன. துடுக்கான குணம் அவரிடம் இல்லை. ஆயினும் கூரிய அறிவு படைத்தவர். தோழர் பலரோடு கூடி ஆடி விளை யாடுதலில் ஆர்வம் அவருக்கு இருந்ததில்லை. வாழ் விலே முன்னேற வேண்டும் என்னும் நோக்கம் அவர் மனத்தில் குடிகொண்டிருந்தது. ஆடம்பரமும் படாடோபமும் அவரை அணுகவில்லை. ஆசிரியத் தொழில் பார்த்தகாலத்தும் கிழிந்து தைத்த சட்டை அணிந்துகொள்வார். பலர் அதைக் குறைகூறும் ந் தம் புன்னகையால் மாற்றிவிடுவார்.

# 4. கவிதை உதயம்

'கவிஞன் கவிஞனாகவே பிறக்கிறான்; அவன் கவிஞனாக ஆக்கப்படுபவனல்லன்' என்பது அறிஞர் ஒருவர் வாசகம். கருவிலே கவிதைத் திருவுடன் வாழ்கிறான் கவிஞன்; அன்னை வயிற்றிலிருந்து மண்ணில் வரும்போதே அவன் கவிதைச் செல்வத்தைத் தன்னுடன் தாங்கி வருகிறான். அவன் உள்ளம் கவிதை; அவன் உணர்ச்சி கவிதை; அவன் கண்களும் உதடுகளும் கவிதை; காண்பன அனைத்தும் அவனுக்குக் கவிதை.

கவிஞன் வாசனை வீசும் ஒரு மலர். அஃது அரும்பு அவிழும்போதே நறுமணத்துடனேயே மலர்கிறது. மதுவைப் பொழிந்துகொண்டே விரிகிறது. கவிஞனும் கவித்துவத்துடனேயே பிறக்கிறான். தித்திக்கும் சிந்தனைத் தேன் அவன் இதயக் கூட்டிலே பொங்கித் ததும்பிப் பூரணமாய் நிற்கிறது. வண்ண மலர் வெப்பத்தால் வதங்கும்; தண்ணிலவால் சிலிர்க்கும்: தென்றல் வரும்போது தலையசைத்து மகிழும். கவிஞனோ மனித இனத்தில் வீசும் துயரப் புயலால் துடிக்கிறான். மகிழ்ச்சி வெள்ளத்தால் மனங்குளிர்கிறான். சோகத் தீயால் உள்ளம் சோர்கிறான். கவிஞன் இதய நிலை அவன் வாழ்வின் இன்ப துன்பத்தை மட்டும் பொறுத்ததன்று. மக்கள் சமுதாயத்தின் வாழ்க்கை நிகழ்ச்சிகளே அவன் இதய வீணையின் நரம்புகளாகும். ஏழிசை

மிழற்ற வல்ல யாழின் நரம்புபோல் மக்களின் எண்ணிறந்த உணர்ச்சிகளை இசைப்பன கவிஞன் உள்ளம்; அதினின்றும் உதயமாவதே கவிதை; அதுவே அவன் வாழ்வில் அருந்தும் சாவா மருந்து: பெறும் பேரின்பம். இம் மரபிலே வந்தவரே கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

கவிமணி இளமையிலேயே கவிதைகள் பல பாடியுள்ளார். ஆயினும் அவை அனைத்தும் இன்று அகப்படவில்லை. இளமையிற் பாடியவற்றை அவர் எழுதி வைக்கவில்லை. எழுதிய சிலவற்றையும் ஏனையோர் காண நேர்ந்தால் ஏளனம் செய்வரோ என்ற அச்சத்தால் பிறரிடம் காட்டுவதுமில்லை. முதுமைக் காலத்தில் அவர் இளமையிற் பாடிய பாடல்களின் சில அடிகளைக் கூறியதுண்டு. அவ் வரிகளைக் கேட்டபோதெல்லாம் இக் கவிதையின் ஏனைய பகுதிகளும் தமிழருக்குக் கிடையாது போயிற்றே என்ற ஏக்கம் எழும். அவற்றில் பல நகைச்சுவை யூட்டுவன; சில சோக அலை வீசுவன; அவையனைத்துமே கற்பனைச் சுடர்கள் மின்னிப்பொலிவன.

தேசிகவிநாயகர் பள்ளியிற் படித்து வந்த போது ஒரு நாள் தமதுள்ளத் தெழுந்த கவிதை ஒன்றைக் காகிதத்தில் எழுதினார். ஆசிரியர் வரும் முன்னரே அதனை மேசை மீது வைத்துவிட்டு யாதும் அறியாதவர்போல இருந்துவிட்டார். வகுப்பினுள் நுழைந்த ஆசிரியர் கண்கள் கவிதையைக் கண்டன. அது அவர் நெஞ்சைக் கவர்ந்தது. படித்தார் பல முறை; முகத்தே மகிழ்ச்சி முகிழ்த்தது. புன்னகை

இதழிலே பூத்தது. "யார் எழுதியது இது" எனக் கேட்டார் ஆசிரியர். தேசிகவிநாயகர் அமைதியைத் தழுவிக் கொண்டனர். எனினும் அவர்தம் பள்ளித் தோழர்கள் அவரைச் சுட்டிக் காட்டிவிட்டனர். கவி செய்த குற்றத்தை அவர் இறுதியிலே ஒப்புக்கொண்டார். தன் மாணவன் இத்தகைய கவிதை எழுத வல்லவன் என எண்ணிய ஆசிரியர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவு முண்டோ?' அன்று தொட்டுத் தேசிகவிநாயகர் மதிப்பு வகுப்பிலே வளரலாயிற்று.

கவிமணியை இளமையிலே கவர்ந்த நூல்களுள் ஒன்று திருவருட்பா. வள்ளலார் அருளிய அருட்பாவின் பாடல் நடையும் கருத்தும் அவர் மனத்தே நன்கு பதிந்தன. இராமலிங்க அடிகள் பாடலை இடையறாது பாடுவார். இத்தருணத்தே அவரது தமிழ்க்குரு சாந்தலிங்கத் தம்பிரான் தேசிகவிநாயகரைத் தேரூர் அழகம்மன் மீது பிரபந்தம் ஒன்று பாடுமாறு ஆணையிட்டார். அழகம்மை ஆசிரிய விருத்தம் தம்பிரானின் கட்டளைப்படி அவ்விளமைப் பருவத்தே அவரால் பாடப்பட்டது. அந்நூலின் ஒழுக்கும் நடையும் அருட்பாவைத் தழுவியிருத்தலைக் கற்பார்நன்கறிவர்.

அருட்பாவின் செய்யுட் போக்கையன்றிக் கொள்கைகளும் அவர் சிந்தனையில் ஆழ்ந்து பதிந்தன. அடிகளாரின் அருட்பா எனும் அமுதத்தை இவர் அள்ளி அள்ளிப் பருகினர். கருப்பஞ்சாறும் கற்கண்டும், கனிரசமும் பாலுமாய் அக்கவிதைகள் அவருக்குச் சுவைத்தன. மூடக் கொள்கைகளையும்

போலி வேடத்தையும் முற்றிலும் வெறுக்கும் வள்ள லார் கருத்துக்களை அவரது இளமை உள்ளம் வரவேற்றுக் கொண்டது.

தேசிகவிநாயகர் ஆங்கிலப் பள்ளியில் பயின்று வந்த காலத்தே தேரூரில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. அவ்வூரிலுள்ள நல்லமாடன் கோயிலில் 'கொடை' கொண்டாடினர். ஊரவர் அனைவரும் ஒருங்கு திரண்டு அவ்விழாவிற் பங்கு கொள்ளலாயினர். இரவிலே வில்லுப் பாட்டும் ஏனைய இசைக் கருவி களும் முழங்கின. ஆலயமெல்லாம் அகிற்புகை கமழ்ந்தது. கோமரத்தாடி எனும் வெறியாடுவான் மாடன் உருவத்தின் முன்னர் ஆவேசம் தோன்ற வந்து நின்றான். செண்டையும் முரசங் களும் அவன் வெறியைப் பெருக்க மேலும் முழக்கப் பட்டன. கோமரத்தாடி பேய்க் குரலிட்டுக் குதித் தான். 'கொண்டுவா பலி' எனக்கூவினன். அவனது இராட்சத அலறல் ஆலயமெல்லாம் எதிரொலித்தது. மறுகணத்தே அஞ்சி நடுங்கிய ஆட்டுக்குட்டி ஒன்று கொண்டு வரப்பட்டது; வெறிபிடித்த அப் பேயாடி குட்டியின்மீது பாய்ந்து அதன் செந்நீரை உறிஞ்சி விட்டான். 'மாடன் சாமி வந்துவிட்டான்' என அக்காட்சியைக் கண்ட மக்கள் நம்பி மூடபக்தியில் மூழ்கி நின்றனர். அதைக் காண நேர்ந்த தேசிக விநாயகர் இதயம் கொதித்தார். ஆண்டவன் பெய ரால் அடாது செய்யும் அநீதியைக் கண்டு கலங் கினார். மக்களின் மடமையைக் கண்டு மனம் வருந் தினார். அவர் கண்ணும் உள்ளமும் கலங்கின. சோகத்தால் சொல்லுகிறார் :

'ஆடினார் ஆடுறுத்தார் அள்ளி யுண்டார்
ஐயகோ! இக்கொடுமை அறிகிலேனே'

இதில் தேசிய விநாயகரின் இளமைக்கருணை இதயமும் அநீதியை அஞ்சாது கூறும் ஆண்மையும் வள்ளலார் பாக்களிற் கொண்டிருந்த உள்ளமும் நன்கு விளங்கும்.

## 5. இல்லற வாழ்வு

தேசிகவிநாயகர் நாகர்கோவிலில் எப். ஏ, வகுப்பில் படித்துக்கொண்டு வரும்போது அவரது வாழ்வில் மறக்கமுடியாத துன்பம் ஏற்பட்டது.

"தந்தை மகற்காற்றும் உதவி அவையத்து
முந்தி இருப்பச் செயல்"

என்னும் வள்ளுவர் வாக்கிற்கு ஏற்பஅவருக்கு அரிய கல்வியை அளித்துப் போற்றி வளர்த்து வந்த தந்தை சிவதாணுபிள்ளை சிவபதம் எய்தினார். தந்தையை இழந்த துயரந் தாங்க இயலாமல் அவர் மிகவும் வருந்தினார். கண்ணீர் வடித்து அலறினார். 'எப்பிறப்பில் காண்பேன் இனி!' என ஏங்கினார். தந்தையின் மறைவு அவர் மனத்தையே மாற்றிவிட்டது. மனம் உடைந்த நிலையில் கல்லூரிப் படிப்பிலும் அவர் உள்ளம் ஊன்றவில்லை. 'எந்தையை இழந்த பின்னர் ஏது செய்வேன்' எனக் கவன்றார். 'தந்தையொடு கல்விபோம்' என்பது அவர் வாழ்வில் உண்மையாயிற்று. நாஞ்சில் நாட்டைவிட்டு மாடமோங்கிய மதுரைமா நகருக்கு ஒருவரும்

அறியாதவகையில் ஓடிவிட்டார். ஆனால், அவரது உறவினருள் ஒருவர் அவரைத் தேடிப் பிடித்து ஊருக்கு அழைத்துச் சென்றார். உற்றாரும் உறவினரும் மீண்டுவந்த தேசிகவிநாயகரைக் கண்டு உளமகிழ்ந்தனர். அன்னை ஆதிலட்சுமி அம்மையார் பழந்தனம் இழந்தன படைத்தவரைப் போன்று மனம் களித்தார்.

மனம் வாடி மதுரையை நாடி ஓடிய தேசிக விநாயகர் மனத்தை மாற்ற வேண்டுமெனச் சுற்றத் தாரும் நண்பரும் எண்ணினர். அத்தருணத்தே அவருக்குத் திருமணம் நிகழ்ந்தது.

"அன்பும் அறனும் உடைத்தாயின்
இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

என்ற பொய்யாமொழியைத் தேசிகவிநாயகர் படித் தவர் மட்டுமன்று; வாழ்விலே காட்டியவர். அவர்தம் மனையாளாக அமைந்த உமையம்மையார் மனைத்தக்க மாண்புடையவர் தற்காத்துத் தற்கொண்டாற் பேணும் தன்மையுடையவர். அடிசிற்கு இனியவர்; அன்புடையவர்.

இல்லறத்தார்க்கு இன்றியமையாப் பண்பு விருந்தோம்பல் ஆகும். "அறவோர்க்கு அளித் தலும், அந்தணர் ஓம்பலும், துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும்" இல்லறத்தார் கடமை என இளங்கோவடிகள் கண் ணகியின் வாயிலாகக் காட்டுகிறார். விருந்தோம்பும்

பண்பு தேசிகவிநாயகர்க்கு இயல்பாயிருந்தது. வரு விருந்து ஓம்பும் வழக்கத்தை அவர் வாழ்க்கையிலே கொண்டவர். செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்க்கும் பண்பாடு அவரிடமிருந்தது. வந்த விருந்தினரை இன்னூர் இனியார் என எண்ணுது அகமும் முகமும் மலர்ந்து உபசரிப்பர். அறுசுவை உணவை இன்சொல்லுடன் கலந்தளிப்பர்.

## 6. ஆசிரியப் பணி அனந்தை வாழ்வும்

அருந்தமிழில் ஆர்வமும் பேரறிவும் பெற்றிருந்த தேசிக விநாயகர் 1901-ம் ஆண்டில் கோட்டாற்று ஆரம்பப்பள்ளி ஒன்றில் ஆசிரியராய் அமர்ந்தார். எழுத்தறிவித்தவன் இறைவனுகும் என்ற முது மொழிக்கேற்ப மாணவரும் மற்ருேரும் வணங்கத் தகுந்த வகையில் அவர் ஆசிரியப்பணி ஆற்றி வந்தார். கள்ளமில்லா உள்ளம்படைத்த பிள்ளை களின் இதயத்தில் பதியும் முறையில் பாடங்களைப் போதிப்பார். குழந்தைகளோடு குழந்தையாய்க் கூடிக்குலவி அரிய பொருளையும் எளிய முறையில் விளக்குவார். சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் திறமை தேசிக விநாயகரிடம் இயல்பாகவே அமைந்திருந்தது. பாடங்களை நடத்திச் செல்லும்போதே வழக்கிலுள்ள பழமொழிகளை ஏற்றமுறையிற் பொருத்தி விளக்குவார். மாணவரும் ஆசிரியரும் அவரை விரும்பியதோடன்றி மதித்தும் வந்தனர். அவ்வாண்டிலேயே ஆரம்பப் பாடசாலையிலிருந்து

நாகர்கோவிலிலுள்ள போதனுமுறைப் பாடசாலைக்குச் சென்றூர். அங்கு மாணவ ஆசிரியர்க்கு ஆசிரியராய் அமர்ந்து அரும்பணி செய்தார்.

நாகர்கோவில் பாடசாலைக்குத் தமிழ் மாணவர் சிலரே வந்தனர். தமிழ் மக்கள் மலிந்த அப்பகுதியில் ஆட்சிமொழியாக மலையாளம் இருப்பக் கண்டு அம்மொழியையே பலரும் பயிலச் சென்றனர். அது இவரைப் பெரிதும் வருத்தியது. தமிழ்மொழி ஆர்வம் நாளடைவில் குன்றிவிடுமோ என அஞ்சி நெஞ்சம் கலங்கினர். எனவே வகுப்பிலே மாணவர் குறையும் போதெல்லாம் தமது ஊரிலுள்ள பிள்ளைகளைப் பள்ளிக்கு அன்புடன் அழைத்து வருவார். இந்நிகழ்ச்சியை நினைக்கும்போது தேசிகவிநாயகருக்குத் தாய்மொழி யிடத்திருந்த அன்பு நன்கு புலனுகும். நாகர்கோவிலில் நல்லாசிரியப் பணி செய்துவரும் நாளில் திருவனந்தபுரப் பெண்கள் போதன முறைப் பாடசாலைக்கு ஆசிரியர் ஒருவர் தேவையாயிற்று. கவிமணி அங்கு ஆசிரியராய் அமர்ந்தார். அவரது புலமையையும் கற்பிக்கும் திறமையையும் கண்ட அரசாங்கக் கல்வி அதிகாரிகள் மகாராஜா பெண்கள் உயர்தரப் பாடசாலையிலே ஆசிரியப் பணியை அவருக்கு அளித்தனர். கவிமணியும் மகாராஜா மாதர் கல்லூரியிலே தமிழ் விரிவுரையாற்றும் பெரும் பொறுப்பை ஏற்றூர்.

திருவனந்தபுரத்து மாதர் கல்லூரியில் ஆசிரியர் வேலையைத் தேசிகவிநாயகர் பார்த்து வந்தபோது குமாரி வாட்ஸ் அம்மையார் கல்லூரித் தலைவராய்

வீற்றிருந்தார். அம்மாது நல்லாள் சிறந்த பண்பும் சீரிய அறிவும் படைத்தவர். தக்காரைப் போற்றும் தன்மை யுடையவர். அறிஞரையும் கலைஞரையும் அன்புடன் ஆதரிக்கும் இயல்பினர். எனவே தேசிக விநாயகரின் தீந்தமிழறிவும், செயலாற்றும் திறமும் கண்டு அவரைப் பெரிதும் மதித்து ஆதரித்தும் வந்தார். அவரது போதனமுறையை வாட்ஸ் அம்மையார் பலமுறை கேட்டு மகிழ்ந்ததுண்டு. கல்லூரியில் தமக்குரிய பொறுப்புக்கள் பலவற்றையும் கவிமணியிடம் அவ்வப்போது அவ்வம்மையார் ஒப்படைத்தும் இருக்கிறார். அவற்றை இறுதிக் காலம் வரையிலும் குறைவற நிறைவேற்றிப் பெருமை பெற்றார் கவிமணி தேசிகவிநாயகர்.

அந்நாளில் தமிழாசிரியப் பதவி ஏனையவற்றினும் தாழ்ந்ததெனை எண்ணப்பட்டு வந்தது. ‘வழியற்றவர் தமிழ் வாத்தியார்’ என்ற வழக்கும் ஒலித்து வந்தகாலம். எனவே மேலதிகாரிகள் தமிழ்ப் பேராசிரியரையும் ஓரளவு தரங்குறைத்தே நோக்குவர். மாதர் கல்லூரியில் தேசிகவிநாயகர் வேலை பார்த்து வந்தகாலத்து மேலதிகாரி ஒருவர் கல்லூரியைப் பார்வையிட வந்தார். அவர் தமக்கு வேண்டிய ஒருவரை அங்கு வேலையிலமர்த்த ஆசை கொண்டிருந்தார். அதனை எவ்வாறு செய்து முடிப்பது என்னும் எண்ணம் அவரது சிந்தையைக் கலக்கி நின்றது. அவ்வதிகாரி தேசிகவிநாயகரைத் தம் அறைக்கு அழைத்துவர ஆணையிட்டார். தேசிக விநாயகரும் சென்று அவரை மலர்ந்த முகத்துடன் வணங்கினர். வந்திருந்த அதிகாரி பண்பெரிழுகும்

தேசிகவிநாயகரை அடிமுதல் முடிகாறும் நிமிர்ந்து நோக்கினர். இவரது அமைதியும் கலையொளி வீசும் கண்களும் புன்னகைபூத்த வதனமும் அவர் மனத்தைக் கவர்ந்தன. எனினும் தாம் எண்ணியதை ஈடேற்றவே அவர் விரும்பினர். அத்தகைய கருத்துடனே கவிமணியை நோக்கி 'ஐயா! ஆண்கள் கலைக் கல்லூரியிலே ஓர் ஆசிரியப் பதவிக்கு ஆள் தேவை. நீர் அதற்கு விண்ணப்பம் செய்யலாகாதா? என வினவினர்.

அது கேட்ட அறிஞர், அதில் 'எனக்கு ஆர்வம் இல்லை" என்றார். "ஏன்" என்றார் அதிகாரி. "அவ் வேலைக்கும் இவ்வேலைக்கும் ஊதியம் ஒன்றே; ஆயினும் இங்கு எனக்குப் பல உரிமைகள் உள்ளன. ஆண்கள் கலைக் கல்லூரியிலோ மலையாள அதிகாரிகளின் கீழ் நான் அடங்கி நடக்கவேண்டும்; அதை நான் விரும்ப வில்லை எனமறுமொழி கூறினர். "மாதர் கல்லூரியில் ஆடவர் வேலை பார்த்தல் ஆகாது என்பதை நீர் அறியீரோ; உம்மை அங்கே மாற்றும் அதிகாரம் எனக்குண்டு" என்றார் அதிகாரி.

மேலதிகாரியின் அம்மொழிகளைக் கேட்ட தேசிக விநாயகர் சிறிதும் தயங்கவில்லை; சிந்தை கலங்கவில்லை. காலம் சிறிதும் தாழ்த்தலின்றி "என்னை அங்கு மாற்றும் அதிகாரம் தங்களுக்கு உண்டாயின் அவ் வேலையை விட்டுவிடும் அதிகாரமும் எனக்குண்டு" என அஞ்சாது பேசினர்.

'மானம் பெரிது வாழ்வு சிறிது' என்ற மனப்பான்மை கவிமணியின் கருத்திலே நிலைத்திருந்தது

என்பதனை அந்நிகழ்ச்சி நமக்கு எடுத்துக் காட்டு கிறது.

தேசிக விநாயகருக்கு ஆண்டுகள் ஐம்பத் தைந்தாயின. கல்லூரியை விட்டு விலகும் காலம் அணுகியது. ஏற்ற நல் ஆசிரியர் ஒருவரை, அருந் தமிழ்ப் பேரறிஞரை இழக்கின்றோமே எனக் கல்லூரி அதிகாரிகள் கருதி நொந்தனர். புலமை நிறைந்த பேராசிரியர் கல்லூரியை விட்டுப் போகின் றாரே என அனைவரும் மனங் கலங்கினர். இவ்வாறு அனைவர் உள்ளத்தையும் கவர்ந்த அவரது ஆசிரியப் பணி இனிது முடிவுற்றது.

## 7. பண்பும் பாராட்டும்

கவிமணி அன்பும் அருளும் அமைதியும் நிறைந் தவர். 'பணியுமாம் என்றும் பெருமை' என்பதற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர். அவரது அன்பு மக்க ளிடத்து மட்டுமன்றி மற்றைய உயிர்களிடத்தும் மலர்ந்து நின்றது.

கவிமணியுடன் உரையாடுவோர் சிலர் தொல்லை யையும் துயரத்தையும் இடையிடையே கூறுவர். பொருளின்மையால் துயருற்றவர் அவர் என்பதனைக் கவிமணி உணர்ந்தால் பணம் வழங்கி அவர்தம் அல்லலை அகற்றுவார். வழங்கிய பொருளை அவர் பெரும்பாலும் திரும்பி வாங்குவதில்லை! மன்னுயிர்த் துயரைத் தன்னுயிர்த் துன்பமாக மதிப்பவர் அவர். ஏழைமக்களின் துயர் காணின் அவர் கண்கள் கண்

ணீரைச் சிதறும்; தம்மாலியன்றவற்றை வழங்க அவர் கருதும் கரமும் முந்தும். தொழிலாளர் துன்பம் எண்ணி அவர் நெஞ்சம் கலங்குவார். அவர்களுக்கே இவ்வுலகம் சொந்தமெனச் சொல்வார்.

"பாடு படுபவர்க்கே—இந்தப்
பாரிடம் சொந்தமையா
காடு திருத்தி நல்லநாடு
காண்பதவரல்லவோ"

உழுது பயிர் செய்வோர்—வயிற்றுக்கு
உணவு பற்றுமல்
அழுதழுது நீதம் நிறப(து)
அறியீரோ ஐயா"

என்ற பாடல்கள் தொழிலாளர் மீது அவர் கொண்ட அன்பின் விரிவை விளக்குவதாகும்.

குழந்தைகளிடம் எல்லையற்ற அன்பு அவரிடம் குடிகொண்டிருந்தது. தனது இல்லத்துச் சுவர்களில் குழந்தைகள் பலவற்றின் படங்களைத் தொங்க விட்டிருப்பார். பலகாலும் அவர் அவற்றைக் கூர்ந்து பார்ப்பார். ஊன்றி அவற்றை நோக்கும் போது தமக்குத் தோன்றும் உணர்ச்சிகளை வந்தவரிடம் கூறி ம கி ழ் வா ர். படங்களாக அவற்றை அவர் கருதுவதில்லை. உயிருடைய குழந்தைகளாகவே எண்ணி வந்தார். இத்தகைய பாசத்தைக் குழந்தைகளிடம் கொண்டிருந்தாலேயே தமது மலரும் மாலையும் எனும் நூலைக் குழந்தைகட்கு முதலில் சமர்ப்பித்தார். குழந்தைகள் பொருட்டே அந்நூலை வெளியிட்டார். அந்நூலில்

குழந்தைகளின் பெருமையையும் சிறப்பையும் உள்ளம் குளிர்ந்து பாடுகிறார் நம் கவிமணி.

கவிமணிக்குத் தமக்கெனக் குழந்தைகள் இல்லை; எனினும் ஊரிலுள்ள குழந்தைகளை எல்லாம் தமதாகவே எண்ணினார். பிள்ளைகளின் துயரம் எல்லாம் கண்டு உள்ளம் உருகுவார். அவை அழு வதைக் காண அவரது மனம் இசையாது. அவை சிரிக்கும்போது தாமும் சிரிப்பார்; அழும்போது தாமும் கண்ணீர் வடிப்பார். இத்தகைய பேரன்பின் ஏதுவால் கவிமணி தம் மருகரின் குழந்தைகளோடு தான் உணவு கொள்வார். வெளியே அவர்கள் சென் றிருந்தால் வரும் வரையும் வீட்டிலே காத்திருப் பார். குழந்தையுளம் படைத்த கவிமணி குழந்தை களோடு குழந்தையாய் வாழ்வு நடத்தி வந்தார்.

கவிமணி உயிர்களிடத்தே கரைகடந்த அன் புடையவர். தன்னுயிர்போல மன்னுயிரையெல்லாம் எண்ணும் உள்ளம் உடையவர். மண்ணுலகில் வாழ மனிதனுக்கு இருக்கும் உரிமையனைத்தும் மற்றைய உயிர்கட்கும் உண்டு என எண்ணியவர். கன்றுகாலி களிடம் சிறந்ததோர் அன்பு அவருக்கு இருந்தது. அவற்றை அன்போடு நெருங்குவார், இளங் கன்று களின் கழுத்தை இரு கரங்களாலும் தழுவி அணைப் பார். பசுக்களுள் மேனியைக் கரங்களால் வருடிக் களிப்பார் காணும் வடிவங்களில் எல்லாம் கடவுள் இருப்பதாகக் கவிமணி கருதுவார். உடலங்கள் எல்லாம் ஆண்டவன் உறையும் ஆலயம் என்பது

அவரது கருத்தாகும். பார்க்குமிடம் எங்கும் பரம் பொருளைப் பார்க்கும் பண்பு அவரிடம் உண்டு.

பறக்கும் குவியோடென்-உள்ளம்
பறந்து பறந்து திரியும்.
கறக்கும் பசுவைச் சுற்றி-அதன்
கன்றுபோலத் துள்ளும்'

'ஈயும் எனக்குத்தோழன்-ஊரும்
எறும்பும் எனக்குத் தோழன்
நாயும் எனக்குத் தோழன்-குள்ள
நரியும் எனக்குத் தோழன்'

என அவர் எழுதிய பாடல்கள் உயிர்களிடம் அவர் கொண்டிருந்த உயர்ந்த அன்பைக் காட்டும். வண்டியிலே குதிரையைக் கட்டி அடிப்பதைக் காண அவர் மனம் வருந்தியது. குதிரையின் வாலை வெட்டுவதும் வாயில் கடிவாளம் இடுவதுமான இரக்கமற்ற செயல் கண்டு அவர் பொருமினர்.

'வெள்ளிப்பூண் கட்டிய சேணமிட்டால்-நெஞ்சு
வேதனை இல்லா(து) இருந்திடுமோ
அள்ளியிடும்படி புல்லுக்காக எங்கள்
ஆவியைக் கொள்வதழகாமோ'

எனக் குதிரையின் புலம்பலாகக் கூறப்படும் கவிதைகள் அவரது உருகிய உள்ளத்தைக் கண்ணாடி போலக் காட்டுவதாகும். கவிமணி உயிர்களிடம் கொண்ட கரைகடந்த அன்பினின்றும் மலர்ந்ததே 'ஆசிய ஜோதி' என்னும் அருமைச் சிறு காவியம்.

கவிமணி அடக்கமே உருவாய் அமைந்தவர்; விளம்பரமும் ஆடம்பரமும் விரும்பாதவர்; இளமை

யிலே தான் எழுதிய கவிதைகளைத் தன் பெயரில் வெளியிடாது வேறு பெயரிலே வெளியிட்டார். ஒரு சமயம், யோகி சுத்தானந்த பாரதியார் இவர் வரலாற்றை எழுத விரும்பிக் குறிப்புக்களைத் தர வேண்டினர். "அடிகளார் எழுதும்படியாக என் வாழ்வில் என்ன இருக்கிறது" என்ற மொழியுடன் வரலாற்றை முடித்துக் கொண்டார் கவிமணி. மற்றொருமுறை அவரது நண்பர் ஒருவர் 'தங்கள் வாழ்க்கை வரலாற்றை எழுதலாகாதா' எனக் கேட்டார். 'உலகக் கவிஞர் தாகூர், உத்தமர் காந்தி, அரசியற் பேரறிஞர் நேரு போன்றோர் வரலாறுகள் உலகிற்கு வழிகாட்டுவதற்கு உள்ளன; அவற்றைப் பல முறை ஆர்வமுடன் படியுங்கள்; என் வரலாறு எதற்கு, என்று அமைதியாய்க் கூறினார் கவிமணி.

கூட்டங்களையும் பெருவிழாக்களையும் அவர் பெரிதும் விரும்புவதில்லை. அவற்றில் கலந்து கொள்ள அவருள்ளம் நாணும். ஆரவாரமாகப் பேசவோ, அப்பேச்சுக்களைக் கேட்கவோ, அவர் ஆசைப்படுவதில்லை. பிறரது சொற்பொழிவுகளைக் கேட்பதற்குச் சென்றாலும் ஒதுக்கமாக ஓரிடத்தே உட்கார்ந்திருப்பார். கவிமணியின் மாணவர் ஒருவருக்குத் திருமணம் நிகழ்ந்தபோது மணமக்களை வாழ்த்தி ஒரு பாராட்டுக் கூட்டம் நடந்தது. வந்தவர் பலர் வாழ்த்துக்களை வாசித்தளித்தனர். மணமக்களின் குண நலங்கள் பற்றிப் பலர் கூறினர். ஓர் ஓரத்தே அமர்ந்திருந்தார் கவிமணி. மணமகனும் அவர் நண்பரும் அவரை அணுகி நாற்காலியிலே

அமருமாறு வேண்டினார். கவிமணியோ, 'ஏனையோர் இங்கிருக்க எனக்கேன் தனி இடம்' என்று அன்போடு கூறி மறுத்து விட்டார்.

ஒரு சமயம், நண்பர்கள் சிலர் கவிமணிக்கு ஒரு நிதி திரட்டி, வழங்க ஏற்பாடு செய்ய முயன்றனர் "எனக்கு எத்தகைய பொருளுதவியும்தேவையில்லை தங்கள் அன்புக்கு என்றும் மறவா நன்றி" எனக் கூறி அம் முயற்சியைத் தடுத்துவிட்டார்.

1950-ம் ஆண்டில் நாகர் கோவிலில் கவிமணியைப் பாராட்டி ஒரு விழா நிகழ்ந்தது. அதில் மத்திய அரசாங்க நிதியமைச்சராய் அந்நாளில் நிலவிய அறிஞர் பெருந்தகை ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் கவிமணிக்குப் பொன்னாடை போர்த்திப் போற்றினார். திருவிழாவிற் கலந்துகொண்ட "ரசிகமணி" அண்ணாமலைச் சர்வகலாசாலையார் அனுப்பிய கடிதம் ஒன்றைக் கவிமணியின் கரத்தே வழங்கினார் அக்கடிதம் கௌரவப் பேராசிரியராக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தே கவிமணியை அமருமாறு வேண்டி வரைந்த வேண்டுகோளாய் இருந்தது. அதைப் படித்த கவிமணி சிரித்துக்கொண்டு, 'இப்போது எனக்கு ஏதோ ஓய்வுச் சம்பளம் கிடைத்து வருகிறது! எனக்கும் வேறு தேவை எதுவுமில்லை பல்கலைக் கழகப் பதவி இப்பருவத்தில் எனக்கு எதற்கு" எனத் தம் நண்பரிடம் கூறிப், பின்னர் அவ்வாறே பதிலும் எழுதிவிட்டார். பணத்தோடு பதவியுந் தம்மைத் தேடிவந்த காலத்தும், அவற்றை விரும்பாத கவிமணியின் ஆசையற்ற உள்ளம் **பொன்னினும் மணியினும் சிறந்ததன்றோ!**

கவிமணியின் இளம்பருவத்தே அவர் அழகுறக் கவிதைகள் ஆக்குதலைப் பெரியவர் ஒருவர் கண்டார். அவரது அருந்தமிழ்த் திறமையைக் கண்ட அப் பெரியார், 'உனக்கு நல்ல புலமை இருக்கிறது அரசாங்கத்தில் உயர்ந்த உத்தியோகத்திற்கு ஏற்பாடு செய்கிறேன்' என்றார். கவிமணியோ 'ஐயா! தாங்கள் என்பால் வைத்த அன்புக்கு அளவிறந்த வணக்கம்; பிறர் தயவால் பெறும் எதையும் நான் விரும்பவில்லை! ஏனையோர் தயவால் எய்தும் பதவியும் பொருளும் என்றும் நீடித்து நிற்பதில்லை; அங்கு மானத்துடன் வாழ்தலும் அரிது. பிறர் ஆதரவால் பெரும்பதவி தாங்கி அறுசுவை உணவை அருந்துவதைவிடச் சுதந்திரமாக இருந்து கூழைக் குடிப்பதே மேலாகும்' என்று, பணிவுடன் கூறினார். இந் நிகழ்ச்சி அவரது தன்மான உணர்வை எடுத்துக் காட்டுகிறது.

கவிமணியின் உறவினரில் கற்றார் பலருண்டு; அவர்கள் பல சமயங்களில் கவிமணியை அணுகி, அவரது செல்வாக்கால் தமக்கு வேலை வாங்கித் தருமாறு வேண்டுவர். தம் உறவினர்பால் தாழாத அன்புடையராயிருந்தும் 'கவிமணி எவர்க்கும் அத்தகைய காரியத்தைச் செய்யவில்லை. 'பல்லெல்லாம் பரக்கக் காட்டிச் சொல்லெலாம் தெரியச் சொல்லிப் பதவியும் பணமும் தேடுதல் சிறந்ததன்று; உலையா முயற்சியாலும் உழைப்பாலும் உயர்நிலைக்கு வருதலே சாலவும் சிறந்தது.' என்ற, இத்தகைய அவர் தம் உள்ள இயல்பை நாஞ்சில் நாட்டைப் பற்றிப் பாடும்போது,

'கொண்ட நிலத்தில் விளைந்துவரும்—அந்தக்
கூழும் அமுதாகக் கொள்ளும் நாடு
கண்டு தொழுதுகை கூப்பிநின்று பெறும்
காசை விடமாகக் காணும் நாடு'

எனக் குறிக்கிறார்.

கவிமணியின் பாடல்களை அரிய செல்வமாகத் தமிழகப் பத்திரிகையாளர் பலரும் கருதினர். ஆனால், அவரோ கவிதையுடன் "நான் அனுப்பியவை ஏற்பனவாக இருக்குமேல் வெளியிடுங்கள்; அல்லாது போயின் விட்டுவிடுங்கள்; எனக்காக எதையும் வெளியிடவேண்டாம்" என்ற வேண்டுகோளையும் விடுப்பார். இச்செயல் அவரது தாழ்மையையும், சீர்மையையும் நன்கு தெரிவிக்கிறது.

## 8. ஊக்கமளிக்கும் உயரிய உள்ளம்

இடைக்காலப் புலவர்கள் தம்மை யொத்த புலவர்களின் மதிநுட்பத்தையும் கல்விப் பெருமையையும் பாராட்டுதல் இல்லை, எனும் குறை இருந்து வந்தது. இதனைப் "புலவர் காய்ச்சல்" என்று கூறுவர். கவிமணியோ இதற்கு முற்றிலும் மாறுபட்டவர். தம்மை நாடிவரும், தமிழ்ப்புலவர்களை அன்புடன் உபசரிப்பார். அவர்களது கவிதைகளையும் கருத்துக்களையும் அமைதியோடும் பொறுமையோடும் கேட்பார். அவர்கள், தம் உள்ளம் நோகாதவாறு அதில் காணும் குறைகளைக் குறிப்பாகக் கூறுவார். காணும் அழகையும் நயத்தையுங் கவினோடு பேசி மகிழ்வார்.

"—பிறர்பிறர்
சீர் எல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார் மாட்டும் இகழ்ச்சி சொலல்"

என்பதை, வாழ்ந்து காட்டியவர் கவிமணி.

விடுதலைப் போரிலே மக்களது தேசியத்தைத் தம் ஆவேசப் பாடல்களால் வளர்த்த பெருமை நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளைக்கு உண்டு. உணர்ச்சி விதையைப் பாரதியார் ஊன்றினார். அதனைக் கவிதை நீரால் வளர்த்தவர் பலருள் நாமக்கல் கவிஞர் ஒருவர். இவரின் 'தமிழன் இதயம்,' எனும் நூல், கவிமணியின் பார்வைக்கு வந்தது. அதில் அமைந்த தமிழன் பெருமை, கம்பனைப் பற்றிய கவிதைகள் முதலியன அவரது நெஞ்சிலே பதிந்தன. 'இராமலிங்கம் பிள்ளையைப்போல் அரசியலில் இணைந்துகொள்ள எனக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. இப்பாடல்கள் உள்ளத்துணர்ச்சியில் உருவானவை' எனக் குறிப்பிட்டுவிட்டு,

"இற்றைத் தமிழன் இதயத்துடிப்பினைச்
சொற்றரு சித்திரத்தால் தோன்றவைத்தான்
—கற்றறிந்த
ஓவிய நற்கலைஞன் ஓதுபுகழ் நாமக்கல்
பாவலன் ராமலிங்கம் பார்"

என்ற வாழ்த்தையும் பாடி அனுப்பினார்.

புதுவையிலே அருந்தவம் புரிந்துவந்த யோகி சுத்தானந்த பாரதியிடம் மட்டற்ற அன்பும் மதிப்பும் கவிமணிக்கு உண்டு. அடிகளாரின் பரந்த பலமொழி இலக்கியஞானம், அவரது பாக்களுக்கு மாறாத

நறுமணத்தையும், மறையாத ஒளியையும் வழங்கி யிருக்கிறது என்பது கவிமணியின் கருத்து. சுவாமி சுத்தானந்த பாரதியார் பிரெஞ்சு மொழியிற் பாடிய கவிதையொன்றை, 'அழியா உயிர்ப்பு' என்னும் தலையங்கத்தில் மொழி பெயர்த்து மகிழ்ந்தார் கவிமணி. அடிகளின் பைந்தமிழ்ப் பணியைப் பாராட்டும்போது, 'சுவாமிகளைப்போல் தொண்டு செய்ய யாரால் இயலும்? என்று சொல்லுவார். அவரது பாக்களின் நயத்தையும் அருமையையும் சுவைத்து சுவைத்து உண்ர்ந்த கவிமணி,

"கண்டும் கனியும் கரும்பும் கனியமுதும்
தண்டமிழில் கொண்டுதரும் தண்ணளியான்"

என அவரைப் புகழ்ந்தார்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் கொள்கை களுள் சிலவற்றைக் கவிமணி ஏற்றுக்கொள்வதில்லை. ஆயினும், பாரதிதாசன் கவிதையில் அவருக்கு எல்லையில்லா ஈடுபாடு உண்டு. கவிஞர் பாரதி தாசனார் தமிழகத்துத் தலைசிறந்த கவிஞர்களில் ஒருவர். காலஞ்சென்ற தேசியக்கவி பாரதியின் தொடர்பு உடையவர் அவர். பாரதியின் பாடல்கள் தேசிய உணர்ச்சியை மக்கள் மனத்திலே பரப்பின; பாரதிதாசன் பாடல்கள் மூடவுணர்ச்சிகளை முறி யடித்தன. இனிய எளிய நடையிலே மின்சார வேகத்துடன் திகழும் இவர் கவிதைகள் தமிழுக்கு அழியாத செல்வங்கள். பயன்படாப் பழைய ஆசா ரங்களிலும், உளுத்துப்போன கொள்கைகளிலும் ஊன்றிக் கிடந்த தமிழர் உள்ளத்தைத், தட்டி எழுப்

பிய பெருமை பாரதிதாசனுருக்கு உண்டு. அமெரிக்கப் புரட்சிக்கவி வால்ட் விட்மின் நினைவு பாரதிதாசனை எண்ணும்போது எனக்கு வருகிறது" என அவர் கூறியுள்ளார்.

நாகர் கோவிலில் பழந்தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் பழுதறப் படித்த அறிஞர்களுள் தசாவதானி ஆறுமுகம் பிள்ளை அவர்களும் ஒருவராவர். 'அவதானம்' என்னும் அற்புதக் கலையைத் திறம்படச் செய்யும் பெருமையுடையவர். தமிழகத்தே பற்பல இடங்களில் சான்றோர்கள் தலைமையில் அவரது அவதானம் நிகழ்ந்தன. ஓர் முறை திருவனந்தபுரத்தே உயர் நீதிமன்ற நீதிபதி திரு. சேஷய்யர் தலைமையில் 'அவதானம்' நடைபெற்றது. கவிமணியும் அங்கு வீற்றிருந்தார். கண்டார் விரும்பவும் காணார் வியக்கவும் அவர் ஆற்றிய அவதானத்தைப் பார்த்த கவிமணி,

"ஆறுமுகம் பிள்ளை அவதானம் கண்டெளியேன்
வேறு முகமன் கூற வேண்டுமோ—தேறுமதி
சேஷையா மெச்சித் திருவாயமலர்ந்து சபாஷ்
பேஷையா என்ற பிறகு"

என்னும் சுவையும், சொல்லழகும், உணர்ச்சியும் ததும்பும் வெண்பாவைப்பாடி அவதானியை ஊக்கியருளினர். 'சபாஷ்' 'பேஷ்' எனும் சொற்கள் கவிமணியின் வெண்பாவிலே விளங்கிப் புதுமணம் பெற்றுப் பொலிதலை இங்குக் காணலாம்.

கோட்டாற்றில் கவிக்குயில் நிலையம் நடத்தி வந்தவர் ஒரு தமிழ்க் கவிஞர். அன்னாருக்கும் கவி

மணிக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. கவி மணியின் மாணவருள் ஒருவராக அவர் பலராலும் மதிக்கப்பட்டு வந்தார்.

அக்கவிஞர் தாம் பாடிய 'தமிழ்ச்சுனை' என்னும் நூலைக் கவிமணியின் ஆசிபெறக்கொண்டுசென்றார். இளங்கவிஞரை உளங்குளிர்ந்து வரவேற்றார் கவி மணி. இருக்கை காட்டி இன்சொல் பேசி மகிழ்வித் தார். உணவளித்து உவந்தார். தமிழ்ச்சுனைப் பாடலை இளங்கவிஞர் பாடக்கேட்டார். பல இடங் களில் கவிமணி தலையசைத்துத் தம்களிப்பைக் காட் டினார். இடையிடையே 'பேஷ்", 'பேஷ்' என்றார். கவிதைகளிலுள்ள நயங்களை அவரேகூறினார். இறு தியாக வெண்பாக்கள் சில விரும்பி அளித்தார்.

"புத்தகக் காட்டில் புகுந்து களைப்புற்ற(து)
இத்தனையும் போதுமினி என் நெஞ்சே—
[நித்தமும்
தண்ணிழல் தங்கித் தமிழ்ச்சுனையில் இன்
[னமுதம்
உண்ணலாம் வாநீ உவந்து"

என்பது அவ்வாழ்த்துக்களுள் ஒன்றாகும்.

சென்னையிலே பாங்கி ஒன்றில் வேலைபார்த்துக் கொண்டே, செந்தமிழ்த் தொண்டாற்றிவரும் அழ. வள்ளியப்பாவிற்கும், கவிமணிக்கும் தொடர்பு ஏற்பட்டது. குழந்தைகளுக்காகக் கவிதைகளை எளிய தமிழில் எழுதிச் சேவை செய்யும் அழ. வள்ளி யப்பா வெளியிட்ட 'மலரும் உள்ளம்' கண்ட கவிமணி,

"சின்னஞ் சிறுவர் சிறுமியர்க்குச்
சிறந்த கருத்தைத் தெளிவாகக்
கன்னல் செங்தேன் முக்கனிகள்
கலந்த இனிய சுவையோடு"

மன்னும்

கவிதை மணம் வீசும் மலரும் உள்ளத்தை'த் தந்தார் அழ வள்ளியப்பா எனப்பாடி, அவரை ஊக்குவித்தார்.

கோட்டாற்றில் செய்குத் தம்பிப் பாவலர் என்பவர் தமிழில் பரந்த அறிவும் சிறந்த புலமையும் பெற்றவராய்த்திகழ்ந்தார். அவர் சதாவதானம்செய்யும் வல்லமை பெற்றவர். அந்நாளிலே சென்னை வரையிலும் வந்து தமிழறிஞர்களுடன் சொற்போராடி, நாஞ்சில் நாட்டின் தமிழ்ப் பெருமையை நாடெல்லாம் அறிவித்தவர் அவர். அன்னாரது மாணவர்கள் பலரே இன்று நாஞ்சிலகத்தே சிறந்த தமிழறிஞர்களாக விளங்குகின்றனர்.

கவிமணிக்குப் பாவலரின் கரைகடந்த கல்வியிலே பெருமதிப்புண்டு. பழைய ஏடுகளையும் நூல்களையும் மேற்பார்வையிட எவரேனும் தம்மிடம் கொணர்ந்தால் "இத்தகைய நூல்களைப்பார்த்து அறியும் நுண்ணிய அறிவு பாவலருக்கே உண்டு, ஆதலின் அவர்பால்கொண்டுசெல்லுங்கள்" எனப்பணிவு தோன்றக் கவிமணி கூறுவார். பாவலர்க்கு அறுபதாண்டு நிறைவேறியது. அதையொட்டி நிகழ்ந்த கூட்டத்திற்குக் கவிமணி தலைமை தாங்கினர். பாவலரின் கூரிய அறிவையும், தமிழ்ப்பணியையும் அழ

கூற மனமுவந்து கவிமணி பாராட்டினூர். அன்றியும் பாவலர் மறைந்தபோது,

"ஓரும் அவதாம் ஒரு நூறு செய்திந்தப்
பாரில் புகழ் படைத்த பண்டிதனை—சீரிய
செந்தமிழ்ச் செல்வனை செய்குதம்பிப் பாவலனை
எந்நாள் காண்பேன் இனி"

என்னும் பாடலைப் பாடி உள்ளம் உருகினூர்.

நாஞ்சில் நாட்டிலே சைவப்பிரசாரம் செய்தலிற் சிறந்து விளங்குபவர் தொண்டர் குழாம் ஆறுமுகம் பிள்ளை ஆவர். நீறு பூசிய மேனியுடனும், நிமிர்ந்த கம்பீரமான தோற்றத்துடனும் ஆலயங்களில் எல்லாம் அவர் சமயச் சொற்பொழிவாற்றி வருவார். தமிழகத்தே அவரது பேருரை நிகழாத கோயில்களே இல்லையெனக் கூறலாம். ஒலிபெருக்கி இல்லாமலே பல்லாயிரக் கணக்கான மக்கள் காதில் விழுமாறு பேசும் வல்லமை அவருக்கு உண்டு. இத்தகைய சைவத் தொண்டருக்கு நாவலர் எனும் பட்டமும், பொற்கிழி ஒன்றும் திருவாவடுதுறை மடத்தார் அளித்தனர். இச் செய்தி கவிமணியின் காதுகளுக்கு எட்டியது. அறிஞர் ஒருவர் பட்டமும் பாராட்டும் பெற்ருர் என்பது கேட்டு, அவருள்ளம் பூரித்தது. தான்பெற்ற பெருமையாக அவர் மனம் பொங்கியது. அதில் பூத்தது ஓர் கவிதைமலர்.

"பாரறிய நாவலர் பட்டமும் பொற்கிழியும்
பேரறிஞன் ஆறுமுகன் பெற்றனனே"

என்பது அப்பாடலின் பகுதி.

கோட்டாற்றில் ஏகபலசாலி எனப் புகழ்பெற்ற கேசவன் என்பார், பெரும்பாரம் தூக்கும் அருந்திறன் பெற்றவர். 'வெயிட்சேம்பியன்' என நாட்டார் அவரை நவில்வர். சாதாரண மக்களால் தூக்குதற்கு நினைக்கவும் முடியாத, பெரும்பாரத்தை எளிதாகத் தூக்கிவிடுந் திறமை அவருக்கு உண்டு. வியத்தகும் உடல் வலிமை படைத்த கேசவனார் ஓர்முறை கவிமணியின் இல்லத்திற்குச் சென்றிருந்தார். அங்குத் திரளான மக்கள் முன்னிலையில் பெரும்பாரத்தை எளிதாகத் தூக்கித் தம் திறனைக் காட்டினார். அவரது அளப்பரிய ஆற்றலைக் கண்ணாரக்கண்ட கவிமணி,

ஈடும் எடுப்புமிலா ஏகபலசாலி என்றிந்
நாடுபுகழ் கேசவ நண்பனே—

எனப்பாடிக் கேசவனைச் சிறப்பித்தார்.

நாடகக் கலையால் தமிழகத்தை இன்புறுத்திவருபவர்கள் டி. கே. எஸ். சகோதரர்களாவர். கூத்தாடிகள் செய்யும் தொழில் எனப் பாமரமக்களால் குறைகூறப்பட்ட நாடகத்தைக் கலையாக மாற்றி, கவிஞரும் அறிஞரும் புகழும் ஓர் அருந் தொழிலாக மாற்றிய பெருமையில் அவர்களுக்கும் பங்கு உண்டு. முத்தமிழுள் நாடகமும் ஒன்று என்பதனை மறந்து கிடந்த தமிழர்க்கு அதனை நினைவூட்டியவர்கள் அவர்களே. கொச்சைத்தமிழாலும், இழிந்தஎண்ணங்களாலும் மாசுற்றுக் கிடந்த நாடகத்தை அருந்தமிழால் வளர்த்துக்கற்றோரும் மற்றோரும் வியக்கச்செய்தவர்கள் டி. கே. எஸ். சகோதரர்களாவர். தமிழகத்து நகரங்களில் எல்லாம் மாதக்கணக்கில் அவர்கள் நாடகங்

கள் நடைபெறும். அறிஞர்கள், அரசியல் தலைவர்கள், புலவர்கள், கவிஞர்கள், செல்வர்கள் அனைவருக்கும் அறிவுக்கு விருந்தாகவும், உள்ளத்திற்கு மருந்தாகவும் அவர்கள் தம் நாடகங்கள் பொலிகின்றன. டி. கே. எஸ் சகோதரர்கள் நாடகங்கள் முற்போக்குடையவை. பழமையும் புதுமையும் கலந்து பரிமளிப்பவை; தீயவரைத் திருத்துவன கவலையுற்றார்க்குக் களிப்பூட்டுவன; சோர்ந்தவர்க்குச் சுகமூட்டுவன; படித்தாரையும் பாமரரையும் பரவசப்படுத்துவன.

இத்தகைய அருங்கலை வளர்க்கும் டி.கே. எஸ். சகோதரர்கள் நாகர்கோவிலில் நாடகங்கள் நடிக்க வந்திருந்தனர். அவ்வமயம் கவிமணி உடல்நலமிறந்திருந்தார். எனினும், ஒளவையார் நாடகத்தைக் காணச் சென்றார். தமிழகத்தின் பெருமையையே நாடறியச் செய்யும் தன்மை வாய்ந்த ஒளவையார் நாடகத்தைக் கண்டு அளவிறந்த மகிழ்ச்சியை அவர் அடைந்தார். இருபதாம் நூற்றாண்டிலே இனிய தமிழிலே உணர்ச்சி ஊட்டும் உயரியவகையிலே நடிக்கும் நடிகர்களை நாம் பெற்றோமே எனப் பெருமிதம் உற்றார்.

"மந்திரமோ தந்திரமோ மாயமோ சண்முகத்தின்
விந்தை நடிப்பு விசித்திரமோ—செந்தமிழ்நா(டு)
அன்று கண்டு போற்றி அடிபணிந்த ஒளவையை நாம்
இன்று கண்ட காட்சி இது"

என்ற இனிய வெண்பாவால் பாராட்டிக் களித்தார்.

தென் திருவிதாங்கூரில் வளம்பெற்று வாழ்வது தமிழ்மொழி ; ஆயினும் தமிழரினம் திருவிதாங்கூர் மக்கள் தொகையில் சிறுபான்மையாகவே உள்ளது. எனினும், அவர்கள் தமிழார்வத்தில் ஏனைய தமிழ் மக்களுக்குச் சற்றும் இளைத்தவரல்லர். எனவே, நாஞ்சில் நாட்டில் பல பத்திரிகைகள் தோன்றின. அவை சிலகாலம் வாழ்ந்து மறைந்தன. இந்நிலை கவிமணியின் உள்ளத்திற்கு இன்னலை ஊட்டியது. இறுதியாகத் தினமலர் எனும் தினத்தாள் நன்முறையில் நடைபெறத் தொடங்கியது. அது கண்ட அவரது உள்ளம் களித்தது.

கவிமணியின் இறுதிக்காலம் நெருங்கி விட்டது; இன்னும் இரண்டொரு நாட்களே அவர் இவ்வுலகில் வாழமுடியும் என்பதனை அறிந்த அன்பர்கள் பலர் கவிமணியைக் காணச் சென்றனர். வந்தவர்களை யெல்லாம் படுக்கையிலிருந்தே அவர் வரவேற்றார். பேசவும் போதிய ஆற்றலில்லை. தம் உணர்ச்சியைக் கண்களாலும் கைச் சைகைகளாலும் காட்டினர். கவிமணியைக் காணச்சென்றவர்களில் தேரூர்வித்வான் உ. சிதம்பரம் பிள்ளையும் ஒருவராவர். அவரும் கவிமணியும் உயிர் நண்பர்கள். உயிருக்குயிரான இத்தகைய நண்பர், தன் உயிர் ஊசலாடும்காலத்தே வந்தது கண்ட கவிமணியின் கண்களில் நீர் சுரந்தது, வாய் குழறியது. எனினும் புதியதோர் ஆவேசம் அவரிடத்தே பொங்கி எழுந்தது. அறிஞர் சிதம்பரப்பிள்ளையின் மைந்தர் திரு. உமைதாணு தினமலரில் பணியாற்றுதல் கவிமணியின் நினைவுக்கு வந்தது. உடனே தம் மருகரை அருகழைத்

தார். மூடிய கண்களுடன் தத்தித் தடுமாறும் மொழியில்,

ஐயமறவே உண்மைகளை
 ஆராய்ந்தெதவர்க்கும் அஞ்சாமல்
செய்ய தமிழில் எடுத்தோதும்
 திருவனந்தைத் தினமலர் நீ
ஐயன் முருகன் திருவருளால்
 அறிஞர் போற்றிப் பாராட்ட
வையம் மீது நீடுழி வாழ்க! வாழ்க!
 வாழியவே!

என்று வாழ்த்தினார். மாளும் தருவாயிலும் மற்றவரை ஊக்கும் மனப் பண்பு கவிமணியிடம் இருந்ததனைத் தமிழகம் உள்ளளவும் மறத்தல் இயலாது.

இவ்வாறு கவிமணி தமது காலத்தே வாழ்ந்த புலவர்களையும், கவிஞர்களையும் மனமுவந்து பாராட்டியும், பாடிப் புகழ்ந்தும் வந்த நிகழ்ச்சியை நினைக்கும் போது, கவிமணியின் பெருமை இமயத்தினும் ஓங்கி உயர்ந்து நிற்கிறது. அவரது பரந்த உள்ளமும், விரிந்த மனப்பான்மையும் பாரெல்லாம் பரவ வேண்டும் என விரும்புகிறோம். கவிதைகளால் மட்டுமன்றித் தம் சீரிய பண்புகளாலும், சிறந்த உள்ளத்தாலும் உயர்ந்தவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, எனக் கூறுவது மிகவும் பொருத்தமாகும்.

## 9. கவிமணியும் கொடையும்

பாவலரும் நாவலரும் மன்னரையும், வள்ளலையும் நாடிப் பொருளுக்காகப் போதல் உண்டு. காடும் மலையும்கடந்து சென்று வள்ளல்களையும், மன்னரை

யும் வாயாரப் பாடுவர்; குறுநில மன்னரையும் பொருள் குவித்த செல்வரையும் தம் அழியாக் கவிதைகளால் வாழவைப்பர். மன்னர் ஆட்சியையும் மறவர் வீரத்தையும், நாட்டின் நலத்தையும் அவர் தம் பாட்டிலே காணலாம்.

பண்ணார்ந்த பாடல்களைக் கேட்கும் மன்னர்கள் மனங்கனிந்து பரிசில் பல வழங்குவர்; மதயானைகளைப் பரிசாக வழங்கிய வள்ளல்களும் உண்டு. இந் நிகழ்ச்சிகளைச் சங்க இலங்கியங்களில் காணலாம்.

கவிமணியோ பாலும் தெளிதேனும் கலந்தாற் போன்ற பாடல்களை ஆக்கித் தமிழகத்தை வாழ் வித்தார். ஆயினும் பொருள் நாடி எவரிடமும் போன தில்லை. பிறர் வழங்கும் பொருளையும் ஏற்றுக் கொள்வதில்லை. அன்பளிப்பாய் எனையோர் கொடுப் பவற்றை அற்றார்க்கும் அலந்தார்க்கும் அளித்து விடுவார். உற்றார்க்கும் உறவினர்க்கும் உவந்து ஈவார்.

கவிமணி கலைச் செல்வர்; ஆனால் பொருட் செல்வரன்று; செல்வம் என்பது சிந்தையின் நிறைவே என்ற மனம் படைத்தவர். இருப்ப வற்றை எல்லோர்க்கும் கொடுக்கும் இயல்பு அவர் பிறவிக்குணமாக இருந்தது. பகுத்துண்டு பல்லுயிரோம்புதல் அவர் பண்பாக இருந்தது. நண் பகல் வந்தவர்க்கு உண்பதற்கு உணவளிப்பார். மாலையில் வந்தவர்க்கு மட்டிப்பழமும் தின்பண்டமும் வழங்கி மகிழ்வார்.

இவ்வாறு உணவு முதலியன கொடுத்தலன்றி இயன்ற பொருளுதவியும் பிறர்க்குச் செய்துவந்தார். கழகங்கள், சங்கங்கள், வாசகசாலைகள், நூல் நிலையங்கள் இவற்றிற்குப் புத்தகங்களைக் கொடுப்ப துடன் பொருளையும் அளித்து ஆதரிப்பார். ஆயிரத் தொரு ரூபாயைத் தன் அன்னை ஆதிலட்சுமி அம்மையார்பெயரால் ஓர்பரிசாக ஏற்படுத்தித் திருவி தாங்கூர்ப் பல்கலைக் கழகத்துக்கு உதவினார். பல்கலைக் கழகத்தே தமிழில் முதன்மையாகத் தேறுபவர்க்கு ஆதிலட்சுமி அம்மையார் பதக்கமாக ஆண்டுதோறும் அது கொடுக்கப்படுகிறது.

பத்திரிகைகள் பலவற்றிற்கு இவர் கவிதைகள் வழங்கி வந்தார். அவற்றிற்கு அன்பளிப்பாய் ஆசிரி யர்கள் பொருள் அளித்தல் வழக்கம். அவ்வகையில் வரும் பொருளைக் கவிமணி தம் வாழ்வுக்கே பயன் படுத்தமாட்டார். வந்தடைந்த தக்கார்க்கும் சங்கங் களுக்கும் வழங்கிவிடுவார்.

உமர்கய்யாம், எனும் அரிய நூலைத் தமிழாக்கம் செய்து வைத்திருந்தார் கவிமணி. கலைச்சுவையும், கற்பனையழகும் காவிய நயமும் நிறைந்த அந்நூலைப் பலர் பாராட்டிப் புகழ்ந்தனர். அக்காலத்தே கவிக் குயில் நிலையம் நடத்தி வந்த அவர் தம் மாணவர் ஒருவர். வழக்கம் போலக் கவிமணியைக் காணச் சென்றார். நீண்ட நேரம் உரையாடி அவ்விருவரும் மகிழ்ந்தனர். கவிக்குயில் நிலையத்தின் நிலையைக் குறிப்பாக அறிந்த கவிமணி வந்த மாணவர் துயர் துடைக்க எண்ணினார். தமது அரிய நூலாகிய ‘உமர்

கய்யாத்தை' எடுத்து அன்பரிடம் அளித்து 'இதனை நீங்கள் வெளியிடுங்கள் ; அதிலிருந்து வரும் வருவா யைக்கொண்டு இனிதே வாழுங்கள் ; இதன் உரிமை யைத் தங்கட்குத் தந்துவிட்டேன்" என்று கூறினார். அன்பர் அடைந்த இன்பத்திற்கு அளவில்லை ; கவிமணி தனக்குக் காலத்தாற் செய்த உதவியைக் காலமெல்லாம் நினைத்துத் தம் அருமை மைந்தனுக் கும் கவிமணியின் திருநாமத்தையே 'தேசிக விநாயகன்' எனச் சூட்டி மகிழ்ந்தார்.

## 10. இதயம் கனிந்த இறை வழிபாடு

தேசிகவிநாயகனார் தெய்வத்திடம் சிறந்த ஈடுபாடுடையவர்.

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்பதைத் தம் வாழ்விலே கடைப்பிடித்தவர். காலையில் எழுந்து நீராடி நெற்றியிலே திருநீறணிந்து ஆண்டவனைச் சிறிது நேரம் சிந்திப்பார். தேவார திருவாசகங்களை அன்பொழுகப் பாடுவார். இத் தகைய முறைக்கு வழிகாட்டியாக அவருக்கு இருந் தவர் திருநெல்வேலியைச் சேர்ந்த உமையொரு பாகக் குருக்கள் ஆவர். அவரிடமே கவிமணி அவர்கள் தீட்சை பெற்றுச் சிவ வழிபாட்டை மேற் கொண்டார். தேசிக விநாயகரின் மூதாதையர் ஆலயம் ஒன்றும் அவர் பிறந்த தேரூரில் உள்ளது. 'தேசிகவிநாயகர் ஆலயம்' என்றே அது அழைக்கப்

படுகிறது. அக்கோயிலுக்கென நஞ்சை நிலங்கள் உண்டு. அதன் வருவாயைக் கொண்டு அங்கு வழிபாடுகள் நடைபெறும். மாதம் தோறும் வளர் பிறைச் சதுர்த்தி நாளில் கவிமணியின் செலவிலே நிவேதனங்களுடன் அவ்வழிபாடு நிகழும்.

கவிமணி காலஞ் செல்வதற்கு இரண்டு நாட் களுக்கு முன்னர்த் தம் நெருங்கிய உறவினரை அழைத்தார். "ஐயா" தேரூர் நம் கோயிலை நன்கு பாதுகாக்க வேண்டும். முட்டுப் பாடின்றி முறையாகப் பூசைகள் நடைபெறவேண்டும். யாவையெல்லாம் படைத்து நம்மை வாழ்விக்கும் பரம் பொருளைப் பணிதல் நம் கடமை" எனக் கூறினார்.

கவிமணியின் ஆவி அகத்ததோ புறத்ததோ என இருந்த காலம். உடலுறுப்புக்கள் அனைத்தும் உணர்ச்சி இழந்து விட்டன. பேச்சும் பெரிதும் நின்று விட்டது. மூச்சு மட்டும் மேலும் கீழும் சென்று கொண்டிருந்தது. அவரது புறக்கண்கள் மூடியே இருந்தன. வந்தவரையெல்லாம் அவர்கள் தம் குரலோசை கொண்டே உணர்ந்து வந்தார். அது காலை நண்பர் ஒருவர் வந்திருந்தார். அவ ரைத் திருவாசகத்தைப் பாடுமாறு வேண்டினார். கவிமணியின் விருப்பப்படி நண்பர் அதனைப் பாடிக் கொண்டு வந்தார். ஓரிடத்திலே ஐய மொன்று ஏற்படப் பாட்டை நிறுத்தினார் அவர். தளர்ந்த அந்நிலையிலும் பாட்டில் ஏற்பட்ட பிழையைக் குறிப்பிட்டுத் திருத்தினார் கவிமணி மறைவதற்கு முன்னாள் வரையிலும் கவிமணியின் மனம் திருவாசகத்திலேயே திளைத்திருந்தது.

கவிமணி இயற்கையை இறைவனாகக் கண்டவர். வானிலும் மண்ணிலும் வளியிலும் ஒளியிலும், ஊனிலும் உயிரிலும் ஆண்டவனைக் கண்டவர். காட்டு வெளியினிலும், மேட்டு நிலங்களிலும் தெய்வக் காட்சியைக் கண்டு களித்தவர். காலைப் போதில் உதயகன்னி கீழ்வானில் எழுதும் பொன்னொளி ஓவியத்தையும், எழிலரும்பு இதழ் விரித்துப் புன்னகை காட்டும் புதுமையினையும், இனிய பண்ணிசைத்துப் பறந்து செல்லும் பறவையினங்களையும், பசுமை கொழிக்கும் பரந்த வயல் வெளிகளையும் காணும் கவிமணிக்கு அவையனைத்தும் கடவுட் காட்சியாகவே பொலிந்தன. மேற்றிசை வானில் தங்கம் உருக்கிப் பரப்பியது போல் தகதகவெனப் பொலியும் ஆதவனின் அற்புத அழகையும், உள்ளம் சிலிர்க்க ஆடிவரும் தென்றற் காற்றையும், பாடிச் செல்லும் பேராற்றின் ஒழுக்கையும், அலைவீசும் ஆழியையும் காணும் போதெல்லாம் கவிமணி கரைகடந்த இன்பத்தில் மூழ்குவார். உள்ளத்தை அவற்றிலே பறிகொடுத்து உவந்துவந்து பாடுவார். வானவெளியில் மாலைப் பொழுதில் கூனற்பிறை வருங்காட்சி சிவன் திருக்கோலமாய்ப் பொலிந்து தோன்றும். மாமலைச் சாரலிலே மதமிகு வாரணக் கூட்டங்களைக் காணும் போது கணபதி அவர்கண்முன் காட்சி அளிப்பார். மாசில் வீணையும், மாலை மதியமும் வீசுதென்றலும் அவருக்குத் தெய்வத் திருவருளாய்ப் பொலிந்தன.

கவிமணி சைவசமயத்தவராயினும் சமரச நோக்குடையவர். எம்மதமும் சம்மதமெனக் கொண்

டவர். பொறுமையே உருவான ஏசுநாதரையும், போதிமரத்தமர்ந்த புத்ததேவனையும் சித்தம் களிய ஏத்தியுள்ளார். இவ்வாறு, அவரது தெய்வமனச் சுனையிலே பூத்த மலர்களே அவரது கீர்த்தனைகள். அம்மலர்களிலெல்லாம் பக்தித்தேன் பாய்ந்து ஒழுகும். ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலாத இறைவனுக்கு ஆயிரம் திருநாமம் கொடுத்துக் கீர்த்தனைகள் பாடினர், அவற்றுள்ளே ஒருமையைக் கண்டு உணர்த்தினர்.

. வெள்ளைத் தாமரையில் வீற்றிருக்கும் தேவியை நிலத்தை உழுவார் கரத்தே கண்டார். நயவுரைகள் பாடிக் களிக்கும் கவிஞரின் நாவிலே பார்த்தார். செழுங்கருணை வாய்ந்தாரின் சிந்தையிலே கண்டார்.

கவிமணி மரபு முறையிலே செய்யப்படும் தெய்வ வழிபாட்டை வெறுப்பவரல்லர்; ஆயினும் புறவழிபாட்டிலே மூழ்கிப் போலி வேடத்தினராய்த் தெய்வ சிந்தனை எதுவுமின்றிச் செய்யப்படும் எதையும் அவர் விரும்பார். பூவும் வேண்டாம்; பூசைக்குப் பொரியும் வேண்டாம்; காயும் வேண்டாம்; கனியும் வேண்டாம்; கனிந்த அன்பு உள்ளமொன்றே வேண்டும் என்பது அவர் கருத்து. உள்ளன்பிலாத கோயில் வழிபாட்டை,

"தூபம் ஆடுதல் கண்டேன்—தீபம்
சுற்றி எடுத்தல் கண்டேன்
ஆபத்தில் காப்பவனைத் தோழி
அங்கே யான் கண்டிலேன்."

எனக் கூறுகிறார்.

"உள்ளத்தில் உள்ளான் அடி—அது நீ
உணரவேண்டும் அடி
உள்ளத்தில் காண்பாய் எனில்—கோயில்
உள்ளேயும் காண்பாய் அடி."

எனும், அவரது அமுத மொழிகள் உண்மைத் தெய்வத்தைக் காட்டும் ஞானவாயிலாகும்.

உண்மை அன்பை உடையவரே
உலகை அளந்த பெருமானை
அண்மையாகக் கண்டிடுவர்
அல்லார் காணார் காணாரே.

எனும் அவரது கவிதையே கவிமணியின் உண்மைத் தெய்வ உணர்ச்சிக்கு உயர்ந்த சான்றாகும்.

## 11. தேவியின் நண்பர்கள்

"உன் நண்பர் யார் என்பதைச் சொல்; நான் நீ யாரெனச் சொல்கிறேன்' என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி; மனிதன் பெறத்தக்க செல்வங்களுள் நல்லார் நட்பும் ஒன்றாகும்; கோடி கொடுத்தும் குடிப் பிறந்தார் தம்மோடு கூடியிருத்தல் சாலவும் சிறந்தது.

"செயற்கு அரிய யாவுள நட்பின் வினைக்கு
அரிய யாவுள காப்பு."

என்பது வள்ளுவர் வாக்கு. தேசிக விநாயகர் பலரோடும் பழகும் பண்பும் அன்பும் படைத்தவர். எனினும் சிலரையே நண்பராகக் கொண்டார்.

திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் சிறந்த தமிழறிஞர். அவரைத் தமிழகம் டி. கே. சி. எனவும் ரசிகமணியெனவும் அருமையாக அழைத்து வந்தது. அவர் அருந் தமிழிலக்கியத்தில் ஆர்வம்கொண்டவர்; கவிதைகளின் நயம் கண்டு களிப்பவர். கம்பன் கவிதையிலே அவருக்கு அளவிறந்த ஈடுபாடு உண்டு. கம்பன் பாவமுதைப் பருகித் தன்னை மறந்து பேசுவார். நாட்டோடிப் பாடல்களிலே கவிநயத்தைக் கண்டால் அதனைப் பாடிக்காட்டி மகிழ்வார். கவிதைகளை இவர் பாடும் முறையும், எழுதும் வகையும் ஒரு தனிப்பட்ட தன்மையுடையவை.

டி. கே. சி. கவிமணியை நேரில்கண்டு பழகும் முன்னரே அவர் கவிதைகளோடு பழகியிருந்தார். பத்திரிகைகளில் தே. வி. யின் கவிதைகளைக் காணின் அவற்றை ஆர்வமுடன் படிப்பார். தமது இலக்கிய நண்பர்களுக்கெல்லாம் வாசித்துக் காட்டுவார். 'தமிழ் மரபுக்கும் மொழிக்கும் புத்துயிர் கொடுக்கப் 'பிள்ளை' ஒருவர் உள்ளார்' எனக் கவிமணியைப் பாராட்டுவார். தே. வி. யின் பாடல்கள் நூல் வடிவில் வெளிவரும் முன்னர் பத்திரிகைகளில் வந்த பாடல்களைத் தொகுத்து வைத்திருந்தார். டி. கே. சி. அவர்கட்குக் கவிமணியின், பாடல்களில் இருந்த பயிற்சிக்கும் அனுபவத்திற்கும் ஓர் நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம்.

வெள்ளகால் சுப்பிரமணிய முதலியாரைக் கவிமணி நெல்லையிலே முதலில் கண்டார். முதலியாரின் உடலுறுதியும் முகப்பொலிவும் சொல் வன்மையும்

கவிமணிக்கு அவரை இளம் பருவத்தினராகக் காட்டின. அவரது வயதைக் கேட்டபோது எழுபது என்பதனைக் கவிமணி அறிந்து வியப்புற்றார். ஏறக்குறைய பத்து ஆண்டுகள் கழிந்த பின்னர் முதலியாருக்கு எண்பதாண்டு நிறைவுவிழா வந்தது. அறிஞரும் சான்றோரும் உளங்கனிந்து விழாவுக்கு வாழ்த்து அனுப்பினர். வாழ்த்துக்களும் கடிதங் களும் அக் கொண்டாட்டத்தில் வாசிக்கப்பட்டன. வெண்பாவில் எழுதப்பட்ட ஒரு வாழ்த்து ஏனையவற் றினும் சுவையும் பொருள் நயமும் பொருந்தி விளங்கி யது. ஆனல் எழுதியவர் பெயர் அதில் இல்லை. இதுபற்றி விழாக் குழுவினரிடையே பரபரப்பு ஏற் பட்டது. கையெழுத்தில்லா வாழ்த்தெழுதியவரைக் கண்டுபிடிக்க அறிஞர் சிந்தையெல்லாம் முனைந்தது.

''எண்பதாண்டு, ஆன இளைஞனே இன்னமுதின்
பண்(பு) எல்லாம் காட்டுதமிழ்ப் பாவலனே—நண்பனே
வெள்ளகால் செல்வனே! வேள்சுப் ரமணிய
வள்ளலே வாழ்க மகிழ்ந்து.''

எனும் அவ்வெண்பாவைப் அறிஞர் பலரும் படித்துப் பார்த்தனர்; பாட்டிலே மூழ்கினர்; பலபடப் பாராட் டினர். எனினும் எவர் எழுதியதென யாராலும் கூற வியலவில்லை. டி. கே. சி. யும் அவ்வெண்பாவை இரண்டொருமுறை படித்தார். அவர் முகத்தே சிந்தனைக் கோடுகள் சிதறின. ஓர்வித ஒளி நெளிந் தது. மறுகணத்தே 'இது கவிமணியின் பாட லாகவே இருக்கவேண்டும். இவ்வாறு வெண்பாப் பாடவல்லவர் இந்நாளில் அவரையன்றி எவருமில்லை

இதனை அவர் பெயரிலே அச்சிட்டு எல்லோர்க்கும் வழங்குங்கள்' எனத் தயக்கமின்றிக் கூறினர், பின் ஆய்ந்தபோது அப்பாடல் கவிமணியின் இதயத் தடாகத்தில் மலர்ந்தது எனும் உண்மை வெளியாயிற்று. இந்நிகழ்ச்சியொன்றே தேசிக விநாயகர் பாடலில் ரசிகமணிக்கு இருந்த தொடர்பை எடுத்துக் காட்டுவதற்குப் போதியதாகும்.

அமைதியும் அடக்கமும் உருவாய் அமைந்த தேசிக விநாயகரைக் கவிமணியாய் உலகுக்கு உணர்த்திய பெருமை டி. கே. சி. அவர்கட்கே உரியதாகும். பாமர ரசிகர் முதல் பெரும் பதவி வகித்த இராஜாஜிவரையிலும் கவிமணியை—அவர் கவிதைகளை-அறியுமாறு செய்தவர் அவரே.

கவிதை நயம் கண்டறியும் ரசிகமணி, தேசிக விநாயகரின் பாடல் நலம் கண்டே அவரைப் பாராட்டினர். கவிமணியும் ரசிகமணியின் தமிழ்ச்சுவையறியும் தன்மையைப் பாராட்டுவார். உணவையும் மறந்து கவிஞருள்ளத்தே மூழ்கித் திளைக்கும் அவர் வாழ்வின் போக்கை வாயார வாழ்த்துவார் இத்தகைய இனிய நண்பரைக் கவிமணி,

"கன்னித் தமிழேபோல் கம்பன் கவியேபோல்
மன்னும் பொதிகை மலையேபோல்—பன்னும்நம்
நாடுமகிழச் சிதம்பர நாத நண்பா
நீடுநீ வாழ்க நிலத்து"

எனப் பாராட்டி வாழ்த்தியதில் வியப்பில்லையன்றே?

கன்னித்தமிழும் கம்பன்கவியும் கமழ் வாசச் சந்தனப் பொதியமும் தமிழருக்கு உள்ளம், உணர்வு

உயிர். எனவே, தமிழினம் நிலைக்கும்வரை ரசிகமணி யும், நீடு வாழவேண்டுமென்பதே இதயங்கனிந்த கவி மணியின் ஆர்வமாகக் காண்கிறோம்.

பலகாலும் உள்ளம் கலந்து உறவாடிப் பழகிய ரசிகமணி டி. கே. சி அவர்கள் மறைந்த செய்தி கவி மணிக்கு எட்டியதும் தலையில் இடிவிழுந்ததுபோல் ஏங்கினார்.

> "தண்பொருனை நெல்லை தமிழர் குலதிலகன்
> நண்பன் சிதம்பர நாதனைப்போல்—பண்பமைந்த
> பாவின் நயமறிந்து பாவலரைப் பாராட்டி
> யாவருளர் ஐயா இனி"

என வாய்விட்டுக் கூறி வருந்தினார்.

திரு. டி. கே. சியின் வாயிலாகவே கவிமணிக்கும் கனம் இராஜாஜிக்கும் தொடர்பு ஏற்பட்டது. கவி மணி இசைத்த கவிதைகளின் எளிமையும், இனி மையும், உயரிய கருத்தும், மின்வீசும் மொழி நடையும், சிந்தையைத் தழுவும் சீரிய கொள்கைகளும், தேச நேசமும் இராஜாஜியின் இதயத்தைக் கவர்ந்தன.

கவிதை வாயிலாகக் கவிமணியைக் கண்டுணர்ந் திருந்த இராஜாஜிக்கு அவரை நேரிலே காணும் ஆர்வம் எழுந்தது. நாஞ்சில்நாடு நோக்கிச் சென்று கோட்டாற்றிலே நண்பர் ஒருவரின் விருந்தினராய் இருந்தார். அந் நண்பரிடத்தே "புத்தேரி என்னும் சிற்றூர் எங்குள்ளது ; இதன் அருகாமையில்தானே" என வினவினார் இராஜாஜி. 'ஆம், அங்கு என்ன வேண்டும்" என்று கேட்டார் நண்பர். அங்குதானே

தேசிகவிநாயகம் பிள்ளை என்பவர் இருக்கிறார்" என்றார் அவர். அக்கோட்டாற்று நண்பருக்கு இராஜாஜி கேட்டவர் யாரெனப் புரியவில்லை. சிறிதுநேரம் பரக்கப் பரக்க விழித்தார். பின்னர்ப் 'புத்தேரியில் தேசிகவிநாயகம் பிள்ளையென ஓராசிரியருண்டு; அவரையா தாங்கள் கேட்கிறீர்கள்?" எனக் கேட்டார் 'ஆம். அவர் கவிதைகள் பாடுவாரா?' என்றார் "இராஜாஜி. குழந்தைகள் பாட்டுப் பாடுவார்; இன்னும் என்னவெல்லாமோ எழுதியிருக்கிறார்" என்று மறுமொழிகூறினார் நண்பர். "அவரைத் தான் நான் கேட்கிறேன்" என இராஜாஜி கூறியதும், 'அவரை வேண்டுமாயின் அழைத்து வரச் செய்கிறேன்' என்றார் அந்நண்பர். உடனே இராஜாஜி "வேண்டாம், வேண்டாம், நானே அவரை அங்குச் சென்று தரிசிக்கிறேன்" எனக் கூறிக்கொண்டே புறப்பட்டார்.

கவிமணியின் இல்லத்தை இராஜாஜி அடைந்தார். கரத்திலிருந்த கனிகளை உள்ளக் கனிவுடன் ஈந்தார். அறிவுக்கண்களாலே ஒருவரையொருவர் அறிந்து வந்த அவ்விருவரும் கண்குளிர நேரிலே காணும் வாய்ப்புக் கிடைத்ததுபற்றி மன மிக மகிழ்ந்தனர். நீண்ட நாள் தேங்கிக் கிடந்த தம் அன்பையெல்லாம் இன்சொல்லால் சொரிந்து இன்புற்றனர். இறுதியாக,

இனியகனிதன் கையில் எடுத்து
எளியேன் இருக்கும் இடந்தேடிக்
கனியும் அன்பால் வந்(து) உள்ளம்
கனியச் செய்த கனவானே

புனித ஞானி என்றுலகம்
புகழும் ராஜ கோபாலா!
நனியெம் பெருமான் அருளாலெந்
நாளும் வாழ்க வாழ்கவே''

என வாழ்த்தெடுத்து இன்புற்றார். இவ்வாழ்த்தினைத் தான் பெற்ற மந்திரக்காப்பாக எண்ணி மகிழ்ந்தார் இராஜாஜி. உளங்கனிந்த அன்போடு இருவர் கரங்களும் குவிய இராஜாஜி கவிமணியிடம் விடைபெற்றுப் பிரியா மனத்துடன் பிரிந்தார்.

சென்னை, திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகங்களிலே அமர்ந்து செந்தமிழ்ப் பணியாற்றி வந்த திரு. வையாபுரிப் பிள்ளை அவர்கள் வழக்கறிஞராய் அனந்தையிலே வாழ்ந்தபோது கவிமணிக்கு நண்பரானார். பின்னர்ச் சென்னையிலே திரு. வையாபுரிப் பிள்ளை தமிழ்ப்பணி புரிந்து வந்த காலங்களில் அவர் தம் ஊருக்கு வரும்போதெல்லாம் கவிமணியைக் கண்டு அளவளாவுவது வழக்கம். அக்காலங்களில் தம் கவிதைகளைத் தேசிகவிநாயகர் தம் நண்பரிடம் வாசித்துக்காட்டுவார். கவிதைகள் பற்றிப் பேராசிரியர் கூறும் கருத்துக்களைக் கவிமணி வரவேற்பார். இருவரின் உரையாடலிலே இலக்கியங்கள் ஒளிரும். கால ஆராய்ச்சி விளங்கும், கல்வெட்டுக்கள், சரித்திர நிகழ்ச்சிகள், இலக்கிய இலக்கண நுணுக்கங்கள் இவை போன்றவையே அவர்கள் தம் உரையாடல்களாக அமையும். எண்ணிறந்த ஏட்டுப் பிரதிகளைக் கவிமணி பேராசிரியர் வையாபுரிப் பிள்ளைக்கு வழங்கியதுண்டு.

கவிமணியும் அறிஞர் வையாபுரிப் பிள்ளையும் ஒரு சமயம் மாடியிலே உரையாடிக்கொண்டிருந்தனர். ஏதோ ஏதுவால் இருவரும் கீழே இறங்கிவர நேர்ந்தது. அதுபோது பேராசிரியர் மேசை மீது விட்டுவந்த 'மணிபர்ஸை'க் கவிமணி எடுத்துப் பாதுகாவலான இடத்திலே வைப்பதற்குச் சென்றார். அதுகண்ட அறிஞர் 'அதிலே ஒன்றுமில்லை' என்றார். மீண்டும் மாடியிலே வந்தபோது மணிபர்ஸைத் திரு. வையாபுரிப் பிள்ளை கேட்டார். கவிமணியோ "அதில் ஒன்றுமில்லை" என்றுதானே கூறினீர்கள்; அது எதற்கு" என்றார். உடனே பேராசிரியர், "தங்களுக்கு வேண்டியது ஒன்றுமில்லை" என்றுதான் சொன்னேன். ஆனால் அதில் பணமிருக்கிறது" என்று கூறினார். இச் சிறுநிகழ்ச்சி பணம் பற்றிக் கவிமணி கொண்டிருந்த மனப்பான்மையை அறிஞர் நன்கு அறிந்துள்ள விதத்தை விளக்குகிறது. கவிமணியிடம் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை வைத்திருந்த பேரன்புக்குரிய மதிப்புக்கும், அவர் கூறும் மொழிகளே சான்றாக அமைகின்றன.

"கவிமணியின் கவிதைகள் தமிழர் பண்பாட்டிலும் மரபிலும் பிறந்தவை. உள்ளத்தே அமுதூறித் தித்திப்பவை. சுவைத்துச் சுவைத்துச் சொல்லுந்தோறும் இனிமை கனிந்து சுரப்பவை; பார்ப்பதற்கு இனியதாய், மோப்பதற்கு நறியதாய், வாயிலிட்டுச் சுவைக்குந்தோறும் ரசம் கனிந்து ஊறுவதாய், உள்ளுந்தொறும் அமுதெனத் தித்தித்து அவாவை மென்மேலும் பொங்கியெழச் செய்வதா'

யுள்ள இன்னாறும்கனியை ஒத்திருப்பவை கவிமணி யின் கவிதைகள். இக் கவிதைகள் திடீரெனக் காய்ப்பதுமில்லை; திடீரெனக் கனிவதுமில்லை. ஆன்ம பரிபக்குவ காலத்திலேதான் காய்த்துமுதிர்ந்து இவை கனிய வல்லவை" எனப் பேராசிரியர் திரு. வையாபுரிப் பிள்ளை பேசும் மொழிகள் அனுபவ வாசகங்கள் என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை.

முத்தமிழிலும் புலமை முதிர்ந்து விளங்கிய கவி மணிக்கு இசைத் தமிழ், நாடகத் தமிழ்க் கலைஞர்கள் பலர் நண்பராயினர்.

இருபதாம் நூற்றாண்டு இசைத்தமிழ்ப் புலவர் களிலே புகழ்பெற்றுப் பொலிந்தவர் இசைச் செல் வர் இலக்குமணப் பிள்ளை ஆவர். அன்னார் எழுதிய அருந்தமிழ்க், கீர்த்தனைகளும், ஏனைய செய்யுள், உரைநடை நூல்களும் சீரிய இலக்கியங்களாகப் பொலிகின்றன. கவிமணி திருவனந்தபுரத்தே வாழ்ந்த காலத்தில் இசைச் செல்வரின் நேசம் பெற்றார். கற்றாரைக் கற்றார் விரும்புதல் இயல்பே யன்றோ! இருவர் நட்பும் வளர்பிறையாய்ச் சிறந்தது. இயல் இசைபற்றிக் காணும்போதெல்லாம் கலந்து இருவரும் உரையாடுவர். இவ்வாறு நெருங்கிய நேசராய் இருந்த இலக்குமணப் பிள்ளை காலஞ் சென்றபோது மனம் நொந்து,

"கந்தர்வ நன்னகர்க்கோ கண்ணுதல் சேவடிக்கோ
சந்தமொழு தண்பொதிகைச் சாரலுக்கோ—முந்துதமிழ்
இன்னிசை மன்னன் இலக்குமணன் ஏகினன்
மன்னிலத்து எம்மை மறந்து."

என்னும் வெண்பாவைப் பாடினர்.

திருவிதாங்கூரில் உயர்தர நீதிமன்றத்து நீதிபதியாய் இருந்த சத்தியநேசன் என்பவர் கவிமணியின் உத்தம நண்பராய் விளங்கினர். பெயருக்கும் குணத்துக்கும் பொருந்தாத பலரைப்போல் அல்லாது சத்தியநேசர் சத்தியநேசராகவே திகழ்ந்தார். வான் மாறினும் மனம் மாறு இயல்பு படைத்த இவர் இன்னர் இனியாரென்றில்லாது வழக்கிற்கு முடிவு கூறுவார். ஏழையென்றும் செல்வரென்றும் கற்றரென்றும் கல்லாதாரென்றும் கருதாது அறங்கூறும் அவையத்தே நீதியுரைப்பார். இத்தகைய பண்பாளர் கவிமணியின் இல்லத்திற்கு அடிக்கடி செல்வார். உளங்கலந்து இருவரும் உரையாடி இன்புறுவர்.

கவிமணியின் எழுபதாண்டு பிறந்தவிழா நாகர் கோவிலில் கொண்டாடப்பட்டபோது சத்தியநேசரே தலைமைதாங்கினர். கவிமணியிடம் பேரன்புடையராய் விளங்கிய சத்தியநேசர் 'கவிமணி நிலையம்' என ஒன்று நிறுவக் கருதினர். அதற்கெனத் தமிழார்வமுடையாரையும் தக்காரையும் சென்று கண்டார். ஒரு சமயம் சத்தியநேசர் கவிமணி நிலையத்தின் பொருட்டாகத் திருவனந்தபுரம் சென்றிருந்தார். திடீரென மாரடைப்பு ஏற்பட்டது. சத்தியம் காத்துவந்த உத்தமர் சத்தியநேசரின் ஆவிபிரிந்து விட்டது. கவிமணியின் பொருட்டாக, அரும் தமிழ் ஆர்வத்தின் காரணமாய்ப் பணியாற்றச் சென்ற இடத்து அவர் மாண்ட செய்தி மக்களை மாருத் துயரத்தில் ஆழ்த்தியது. அச்செய்தி கேட்ட கவிமணி துடிதுடித்தார். கண்ணீர் சிந்திக் குழந்தையைப் போல் விம்மி விம்மி அழலானர்.

"தேடித் தேடி மக்கள் அழத்
திகைத்து மனைவி சோர்ந்து விழ
வாடி உற்றார் உறவினர்கள்
வற்றாக் கண்ணீர் வடித்தலற
ஈடும் எடுப்பும் இல்லாத
ஏக நீதிபதி என்றிந்
நாடு புகழ் சத்திய நேச
நண்பன் எம்மைப் பிரிந்தனனே."

என்று உள்ளம் உருகிப் பாடி வருந்தினார்.

இந்திய நாட்டுப் பொருள்நூல் வல்லுநரில் தன்னிகரற்று விளங்கியவர் திரு. ஆர். கே. சண்முகம் செட்டியாராவர். அரசியற் கருத்துக்களில் அவரோடு மாறுபட்டாரும் அவரது பொருளாதாரக் கருத்துக்களைப் போற்றினர். திருவாளர். ஆர். கே. சண்முகம் செட்டியார் பொருளாதாரப் புலவர் மட்டுமன்று, அருந்தமிழ்ப் பேரறிஞராகவும் தமிழ்த் தொண்டராகவும் விளங்கினார். நாள்தோறும் தமிழ் இலக்கியங்களைக் கற்பார். புலவர்களுடன் அமர்ந்து பல பொருள்களை ஆராய்வார். இலக்கண நுணுக்கங்களை எண்ணுவார். கண்ட கருத்துக்களைப் பலர்க்கும் எடுத்து ஓதுவார். சிலப்பதிகாரத்துக்கு அவரால் அரியதோர் உரையும் எழுதப்பட்டிருக்கிறது. இத்தகைய பேரறிஞர் கவிமணியிடம் ஈடுபாடு கொண்டதில் எத்தகைய வியப்பும் இல்லை. திரு. ஆர். கே. சண்முகனார் கவிமணியின் இல்லத்திற்குத் தம் குடும்பத்தோடு சென்றார். அவரிடம் நெடுநேரம் உரையாடிக் களித்தார்.

நாகர் கோவிலின் அருகாமையில் அமைந்த ஒழுகினசேரி என்னும் ஊரில் கவிமணியைச் சிறப்பிக்க ஒர் மகாநாடு நிகழ்ந்தது. அதில் திருவாளர் ஆர். கே. சண்முகனார் கவிமணிக்குப் பொன்னாடை போர்த்தார். இத்துணை அன்புகொண்ட நண்பர் திரு. ஆர். கே. சண்முகனார் மறைந்தபோது கவிமணி உள்ளம் கலங்கி,

"மன்னாதி மன்னர் மதிக்கும் மதிப்புடையான்
பொன்னாடை வந்தெனக்குப் போர்த்தமகான்—தென்னாட்டுச்
சிங்க ஏறான திருக்கோவைச் சண்முகனை
எங்கே நான் காண்பேன் இனி."

என ஏங்கினார்.

நாடகக் கலைஞர் பலரும் கவிமணிக்கு நண்பராயினர். நகைச்சுவையில் திரைப்பட உலக மக்களைத் திளைக்கவைத்த திரு. என். எஸ். கிருஷ்ணனுக்குக் கவிமணியிடம் கரைகடந்த அன்பு எழுந்தது. தேசிக விநாயகர் பிறந்த நாஞ்சில் நாட்டிலே நானும் பிறக்கும் பேறு பெற்றேனென எண்ணி அவரது உள்ளம் பூரித்தது. கவிமணியின் கவிதைகளைத் திரைப்பட உலகில் முதலிற் பரப்பியவர் அவரே. வானொலியிலும் தம் உரையாடலிலும் அவரது பாடல்களை ஏற்ற இடங்களில் எடுத்தாள்வார். தமது இயற்கையான நடிப்புத் திறமையுடன் கவிமணியின் பாடல்களை அவர் கூறும்போது அவற்றிற்குத் தனித்தவொரு அழகும் இனிமையும் ஏற்படக் காணலாம்.

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனுக்குக் காந்தியடிகளிடம் கரைகடந்த அன்பு உண்டு. அழியாப் புகழ்பெற்ற அரும்பெரும் ஞானி காந்தியடிகளுக்கு அழகிய நிலையம் அமைக்க ஆசை கொண்டார், அவரது ஆர்வம் நாகர்கோவிலில் காந்தி ஸ்தூபியாய் ஓங்கி நிற்கின்றது. அதனைச் சுற்றிய சுவர்களில் அடிகளாரின் மணிமொழிகளைக் கலைவாணர் பொறிக்கச் செய்தார். காந்தியடிகளின் மணிமொழிகளோடு இணையாக எழுதத்தக்கவை எவை எனச் சிந்தித்தார். கவிமணியின் பாடல்களே என அவரது உள்ளம் உரைத்தது. தேசிக விநாயகர் பாசுரங்கள் காந்திஸ்தூபியிலே அழியாது பொலியப் பொறிக்கப்பட்டன.

கலைவாணர் கவிமணியை அடிக்கடிச் சென்று காண்பார். கவிமணியின் மலர் வாயினின்று உதிறும் மணிமொழிகளை அவர் எழுதிக் கொள்வார். நடிப்பு முறையிலே தமிழை வளர்ப்பது பற்றிக் கவிமணி நல்லுரைகளை அவருக்கு வழங்குதலுண்டு. இருவரும் இதயம் கலந்த நண்பராய், இலக்கியத் துறையிலே வாழ்ந்தனர்.

கலைவாணர் காந்தியடிகளிடம் கொண்ட அன்பேபோல் நாகர் கோவில் பூங்காவிலே ஓங்கி நிற்கும் காந்திஸ்தூபியை

"மங்கை மதுரம் மணவாளன் கிருஷ்ணனிவர்
செங்கைப் பொருளின் திருப்பணியாம்—பொங்குபுகழ்
காந்தி மகான் கற்பித்த கற்பனைகள் அத்தனையும்
ஏந்தினெழும் தூபி இது"

எனும் வெண்பாவால் ஒளிபெறச் செய்தார்.

கவிமணியிடம் பெரிதும் ஈடுபாடுடைய கலைவாணர் வித்துவான் சதாசிவம் எழுதிய கவிமணியின் வரலாற்றைத் தம் செலவிலே வெளியிட்டுப் பல்லோருக்கும் வழங்கினார். இந்நிகழ்ச்சி யொன்றே அவர்தம் நட்புக்குச் சிறந்தவொரு சான்றாய் இலங்குகிறது.

ஔவை டி. கே. சண்முகம் சகோதரர்கள் கவிமணியிடம் மதிப்பும் பெருமையும் வைத்துப் போற்றி வந்தனர். நாடகக் கலை வளர்வதற்கு ஏற்ற நல்வழிகளை அவர்கள் கவிமணியிடம் கேட்டறிவதுண்டு. பண்டைத் தமிழ் நாடகப் பண்புகளைக் கவிமணி அன்னார்க்கு எடுத்துரைப்பார். புதுமையும் பழமையும் பொலிய நாடகங்களை அமைத்தல் பற்றி அவர்கள் கூடிச் சிந்தனை செய்வர்.

> "மங்கையராகப் பிறப்பதற்கே—நல்ல
> மாதவம் செய்திட வேண்டுமம்மா,"

எனும் கவிமணியின் அழகிய பாடலை ஔவை சண்முகனார் நாடக அரங்கிலே பாடும்போது அப்பாட்டின் சுவை அமிழ்தினும் சிறந்து சுவை மிகுந்து விளங்கும். நாகர் கோவிலுக்கு இந்நாடகச் சகோதரர்கள் வரும்போதெல்லாம் கவிமணியைக் காண்பதில் தவறுவதில்லை. அங்குக் கவிமணி நிலையம் ஓங்கி எழ நாடகங்கள் நடித்துப் பொருளுதவினர்.

ஔவை டி. கே. சண்முகம் சகோதரர்களின் நாடகங்களைக் கண்ட கவிமணி தமிழ் நாடகக்கலை இனிமேல் மாளாது என மகிழ்ந்தார். அவர்கள் தம்

அரிய நாடகங்களைச் சீரிய வகையிற் பாராட்டிப் பேசினார்.

கவிமணி காலஞ்சென்ற பின்னர் சென்னையில் இரங்கற் கூட்டங்கள் பல நிகழ்ந்தன. அப்பெருங் கூட்டங்களில் எல்லாம் டி.கே.எஸ். சகோதரர்கள் பங்கு கொண்டு அவை ஒழுங்குற நடைபெறச் செய்தனர்.

புதுவை ஞானி சுத்தானந்த பாரதியார் முத்தமிழ்க் கவிஞரிடம் ஈடுபட்டு அவரைக் காணப் புத்தேரிக்குச் சென்றார். தவ ஒளி தவழும் அடிகளாரின் தோற்றமும் மாசிலா ஒழுக்கமும் கவிமணியின் கருத்தைக் கவர்ந்தன. அடிகளார் திருவுருவப் படத்தைத் தம் இல்லத்தில் வைத்துப் போற்றினார். யோகிசுத்தானந்த பாரதியார் தம் நூல்கள் அனைத்தையும் கவிமணிக்கு வழங்கி உளம் களித்தார். அச்சிட்டு வெளி வரும் முன்னரே பல கவிமணியின் கருத்தறிய அனுப்பப்பட்டன. பன்மொழிப் புலவராய்த் திகழ்ந்த அடிகளின் இலக்கியப் பேரறிவும், கவிமணியின் கவிதை நயமும் கலந்து உறவாடி ஒளி வீசின.

புதுவை யோகி கவிமணியின் இல்லத்தை அடைந்த போது இருவரும் எய்திய இன்பத்திற்கு எல்லை இல்லை. அறிவுப் பெருங்கடல்கள் ஒன்றோடொன்று அளவளாவின. 'ஞானக்குன்றாய் தவ சீலர் தம் குடில் நாடி வந்தாரே' எனக் கவிமணி உள்ளம் பூரித்தார். வந்தனங்கள் பல வழங்கினார்; மனங் கனிந்து பேசினார்.

" சிந்தை கனிந்(து) இந்தச் சிறுகுடிலில் காட்சிதர
வந்(து) அருள்சுத் தானந்த மாமுனியே—
வந்தனங்கள்
ஆயிரம் செய்தேனே அரிய தமிழ்த் தெய்வக்
கோயில் நீ என்(று) உளம் கொண்டு."

எனும் கவிமணியின் பண்பான வெண்பா அவர் அடிகளாரிடம் கொண்ட மதிப்பையும் சிறப்பையும் விளக்குவதாகும். எளிய இனிய மொழிகளால் அற்புதமான கவிதைகளை ஆக்கித் தமிழகத்தை வாழ்விக்கும் கவிமணியின் வாழ்க்கை ஏனைய மக்களுக்கு வழி காட்டியாயிருக்கவேண்டும் எனப் பாரதியார் எண்ணினார். எனவே அவரது வாழ்க்கை வரலாற்றை ஒரு சிறு நூலாக வெளியிட்டார்.

இவ்வாறு, அறிஞர் பலர் கவிமணிக்குநெருங்கிய நேசராய்த் திகழ்ந்தனர். கவிமணி காலத்தே வாழ்ந்த அறிஞர்கள் மட்டுமன்றித் தமிழர் அனைவருமே அவரது அன்பர்கள் தாம் எனச் சுருங்கச் சொல்லலாம். அறிஞர்களாகிய வி. ஆர். எம். செட்டியார், பாஸ்கரத் தொண்டைமான், அ. சீனிவாசராகவன், ஆ. முத்துசிவன், தசாவதானி பி. ஆறுமுகம் பிள்ளை, பு. அருணாசலம், சுடலைமுத்துப் பிள்ளை, உமைதாணு பிள்ளை, தே. ப. பெருமாள், கல்கி. கிருஷ்ணமூர்த்தி, கி. வா. ஜகந்நாதன். ம. பொ. சிவஞானம், சதாசிவம் பிள்ளை, காரனை துரைக்கண்ணன், தேரூர் சிதம்பரம் பிள்ளை, ஆர். வீரபத்திரன், ஆ. குமாரசாமி போன்றோர் பலரும் கண்டும் கலந்தும் கவிமணிக்கு நண்பராய்த் திகழ்ந்தனர். அன்றியும்

வெளிநாட்டுப் புலவர்களும், கடல்கடந்து சென்ற தமிழறிஞர்கள் பலரும் கடித வாயிலாகக் கவி மணிக்கு அன்பராயினர்,

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

எனும் புறநானூற்றின் பொன்மொழிக்கு இலக்கிய மாகக் கவிமணி வாழ்ந்து வந்தார்.

## 12. தமிழ்த் தொண்டு

கவிமணிக்கு இளமையிலேயே தமிழார்வமும் அறிவும் இருந்தன. கவிதைகளைப் பாலப் பருவத் திலேயே பாடும் திறமையை அவர் பெற்றிருந்தார். ஆரம்பப் பள்ளியில் மலையாளத்தைப் படித்தவரா யினும் தாய்மொழிப் பயிற்சியே அவரிடம் தலை சிறந்து நின்றது.

"எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே."

என நெஞ்சம் குளிரப் பாரதியின் பாடலைப் பாடிப் பூரிப்பார். அனந்தையிலே தமிழ்ப்பணி ஆற்றி வந்தபோது மலையாளச் சிறுவர்கள் 'குழந்தைப் பாடல்கள்' பலவற்றைப் பாடி ஆடுவர். தமிழிலோ அந்நாளில் பாரதியின் 'ஓடிவிளையாடு பாப்பா' என்னும் பாட்டையன்றிச் சிறுவர்க்கேற்ற இனிய எளிய பாடல்கள் இல்லை. இக்குறை அவரது நெஞ்சை வருத்தியது. பல்லாயிரக்கணக்கான பைந்தமிழ்ச் சிறுவர்கள் பாடியாடிக் களிக்க எளிய

பாடல்கள் இல்லையே என ஏங்கினார். தம் புலமையை எளிமையாக்கிக் குழந்தைகளுக்காகப் பல கவிதைகளை எழுதினார். அவை 'சிறுபாமாலை' என்னும் பெயரால் அழைக்கப்பட்டது.

ஆங்கில மொழியிலே சிறுவர்க்காக எழுதப் பட்ட பாக்கள் பல கவிமணியின் கருத்தைக் கவர்ந்தன. 'இத்தகைய அழகும் எளிமையும் அமைந்த கவிதைகள் தமிழில் இல்லையே' என எண்ணினார். அவற்றைத் தமிழில் ஆக்க ஆர்வம் கொண்டார். பாடல்களின் போக்கையும் கருத்தையும் மனத்திலே பதித்துக் கொண்டார். தித்திக்கும் தீந் தமிழிலே இளைஞர்களுக்கு ஏற்ற எண்ணற்ற கவிதைகளை எழுதினார். குழந்தைப் பாட்டுகள் பல பிற்காலத்தே தோன்றுவதற்கு வழிகாட்டியாய் இருந்தவர் கவிமணியே என உறுதியாகக் கூறலாம்.

கவிமணியின் முதல் கவிதை நூல் அழகம்மை ஆசிரிய விருத்தமாகும். இது 1895-ம் ஆண்டு எழுதப்பட்டது. இந்நூல் கவிஞர் இயற்கையில் ஈடுபட்டிருந்த இயல்பும், இறைவன்பால் கொண்டிருந்த பக்திப் பண்பும், பழந் தமிழிலக்கியங்களில் அவர்க்கிருந்த பற்றும் நன்கு காட்டுகின்றது. கவிதைத் துறையிலே கவிமணி செய்த தொண்டு மிகப் பரந்தது. தமிழகத்தால் என்றும் மறக்கவோ மாற்றவோ முடியாதது. வையமுள்ளளவும் வாழும் பணியைக் கவிமணி செய்துவிட்டுக் கண்மூடிவிட்டார்.

இலக்கியத்துடன் கவிமணியின் இதயம் நிற்க வில்லை, கவிதை ஆழியிலே கட்டுண்டு கிடந்துவிட

வில்லை. ஆராய்ச்சித்துறையில் அவர் ஆர்வம் கொண்டார். அந்நாளில் அனந்தையிலே திருவாளர் கணபதிப்பிள்ளை என்பவரும், திரு. கோபிநாத ராவ் என்பவரும் சிலாசாசன ஆராய்ச்சிகள் செய்துவந்தனர். அறிஞர் கணபதிப் பிள்ளையின் தொடர்பு கவிமணிக்கு ஏற்பட்டது. கல்வெட்டுக்களை ஆராயும் வகையை அவர் கவிமணிக்குக் காட்டினர். தமிழ் நாட்டின் வரலாற்றைத் தக்க சான்றுகளுடன் அறியவேண்டும் என்னும் ஆர்வத்தில் மூழ்கிக்கிடந்த கவிமணிக்குக் கல்வெட்டுக்களால் வரலாற்றுக் கண்களைத் திறந்த பெருமை கணபதிப் பிள்ளைக்கே உரியதாகும்.

கல்வெட்டுக்களில் ஈடுபட்ட கவிமணி நாஞ்சில் நாட்டில் பல இடங்களுக்கும் சென்றார். பழைய ஆலயங்களிலுள்ள பாறைகளை எல்லாம் ஆராய்ந்தார்; சுவர்களையும் கற்றூண்களையும் சுற்றிச் சுற்றி வந்தார். அவற்றிலுள்ள சாசனங்களை எடுத்து, எழுதிச் சிந்தித்து உண்மைகள் காண முயன்றார். சுசீந்திரம், கன்னிமாகுமரி, கோட்டாறு, நாகர் கோவில், அழகிய பாண்டிபுரம், பூதப்பாண்டி முதலிய ஆலயங்களில் மறைந்து புதைந்துகிடந்த கல்வெட்டுக்களின் கருத்துக்கள் கவிமணியின் உலையா உழைப்பால் வெளியாயின. 'காந்தளூர்ச் சாலைக்கலம் அறுத்தது' எனும் கல்வெட்டு வரி ஒன்றிற்குக் கவிமணி கண்ட உண்மைப் பொருளே அவரது கல்வெட்டு ஆராய்ச்சிக்கு ஏற்ற சான்றாகும். கல்வெட்டுக்களை ஆய்ந்துவந்த பேராசிரியர் டாக்டர் கனகசபாபதிப் பிள்ளைக்குப் பெரிதும் தம் ஆராய்ச்சி

யால் உதவினர். அவர் சுசீந்தைபற்றி வெளியிட்ட சீரிய நூலுக்குக் கவிமணியின் ஆராய்ச்சிகள் பெரிதும் ஆதரவாயிருந்தன.

கவிமணி கண்ட ஆராய்ச்சி முடிவுகள் அவ்வப் போது, 'தமிழன்', 'கேரளா சொஸைட்டி' எனும் பத்திரிகைகளில் வெளிவந்தன. நாஞ்சில் நாட்டு அழகியபாண்டிபுரத்து முதலியார் வீட்டு ஏட்டுப் பிரமாணங்களைக் கவிமணி ஆராய்ந்தார். நாஞ்சிலகத்தின் வரலாறுவெளிவரவேண்டுமெனப்பேரார்வம் கொண்டிருந்த வழக்கறிஞர் சிதம்பரம்பிள்ளை ஆதரவு கொண்டு அதனை வெளியிட்டார். ஏட்டுப் பிரமாணத்தால் தாம் அறிந்த உண்மைகளைக் 'கேரளா சொஸைட்டியில்' ஆங்கிலத்திலே ஓர் சொற்பொழிவால் விளக்கினர். நாஞ்சில் நாட்டு மக்கள் வரலாற்றை விளக்குதற்குச் சிறந்ததோர் கருவியாக இவ்வாராய்ச்சிக் கட்டுரை இருந்தது. கவிமணி ஓர் பெரிய சீர்திருத்தவாதியாகத் திகழ்ந் தார். நாஞ்சில் நாட்டில் ஓர் விசித்திரச் சட்டம் சமூகத்திடை நிலவியது. தந்தையின் சொத்து மக்களுக்குச் சேராது மருமக்கட்கே சென்று வந்தது. மக்கள் சொத்தைப் பெறும் முறையை 'மக்கட்தாயம்' என்றனர். மருமக்கட்குச் சொத்துச் செல்லும் முறை 'மருமக்கட் தாயம்' எனக் கூறப்பட்டது. தந்தைக்குத் தன் மக்களின் நலத்தைப்பார்க்க இச்சட்டம் பெரிதும் இடம் தரவில்லை. மருமக்களை ஓரளவு அவன் புறக்கணித்துத் தம் மக்களிடம் பாசம் கொண்டால்,

அவன் 'குடும்பதோஷி' எனப் பழிக்கப்பட்டு நீதிமன்றத்துக்கு இழுக்கப்பட்டான். இத்தகைய இயற்கைக்கு மாறுபட்ட சட்டத்தை மாற்ற அந்நாட்டில் பலரும் எண்ணினர். எனினும் வெளிப்படையாகக் கூற எவரும் முன்வரவில்லை. கவிமணியோ தம் நயமான பாக்களாலும், சொற்களாலும் மக்கள் மனத்தை மாற்ற முயன்றார். மருமக்கள் தாயமுறையால் ஏற்படும் தொல்லைகளையும் அல்லல்களையும், அழிவுகளையும், இழிவுகளையும் அழகியதோர் சிறு காவியமாகச் செய்தார். அதனைத் தம் பெயரில் வெளியிட்டால் மக்கள் சிலர் மனம் கொதிப்பர் என்பதை உணர்ந்து வேறு பெயரில் தமிழன் என்னும் பத்திரிகையில் வெளியிட்டார். 'பொய்மையும் வாய்மையிடத்த' என்பதை மனத்துட் கொண்டு பலமுறை ஏட்டினின்றும் எடுக்கப்பட்டது' எனவுங் கூறினார். மருமக்கள் வழி மான்மியத்தை நாஞ்சில் தமிழர் நன்றாகப் படித்தனர். மருமக்கள் தாயச் சட்டத்தால் ஏற்படும் தீமைகளை எல்லாம் தெரிந்தனர். சட்டத்தை மாற்றத் திட்டமிட்டுப் புரட்சியும் செய்யத் தொடங்கினர். இறுதியிலே கவிஞர் எண்ணம் ஈடேறியது. மக்கட் தாயமே நிலைத்து நின்றது. பன்னெடுங்காலமாக மக்களினத்தைச் சீரழித்து வந்த ஓர் பழக்கத்தைத் தமது பாட்டாலும் உரையாலும் மாற்றிய பெருமை கவிமணிக்கே உரியதாகும். 'மருமக்கள் வழி மான்மியம்' எனும் நூல் ஓர் சமுதாயச் சித்திரம். தமிழுக்குப் புதியதோர் இலக்கியம். 'நகைப்பும் இகழ்ச்சியும் விரவிவரும் கவிதைச் செல்வம். சீர்திருத்தப்பயன்

தரும் செழுமரம்" எனப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை கூறுகிறார்.

அனந்தையிலே ஆசிரியப் பணியைக் கவிமணி ஆற்றி வந்தபோது வழக்கறிஞர் எஸ். வையாபுரிப் பிள்ளை மனோன்மணீயத்தின் இரண்டாம் பதிப்பை வெளி வரச் செய்தார். அந்நூலின் அருமை பெருமைகளைத் தமிழகம் அறிய வேண்டுமெனக் கவிமணி ஆர்வம் கொண்டார். சென்னையிலிருந்து அந்நாளில்வெளிவந்த 'திராவிடன்' எனும்பத்திரிகை யில் 'மனோன்மணீயத்தின் மறு பிறப்பு' எனும் கட்டுரை எழுதி அந்நூலின் சிறப்பை அவர் விளக்கினார். அப்பதிப்பு வெளிவரக் கவிமணி அரிய உதவிகள் பல செய்தார். சிறந்த தமிழிலக் கியங்கள் மறைந்து விடலாகாது, என்பதில் கவிமணி பெரிதும் ஆர்வமுள்ளவர்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தினின்று வெளிவரும் 'செந்தமிழ்' எனும் பத்திரிகை கவிமணி காலத்தே அரும் பெரும் அறிஞர்கள் கட்டுரைகளைத் தன் னகத்தே கொண்டு மிளிர்ந்தது. இலக்கண இலக் கியங்களை ஐயந் திரிபறக் கற்றோர்க்கே அதில் இட முண்டு. போலிப் புலவர்களுக்கும் நுனிப்புல் மேயும் தமிழருக்கும் அப்பத்திரிகை ஆதரவளிப்பதில்லை. சேது சமஸ்தானம் மகாவித்வான் ரா. இராகவையங் கார், மு. இராகவையங்கார், அரசன் சண்முகனார், பின்னத்தூர் நாராயணசாமி அய்யர், ந. மு. வேங் கடசாமி நாட்டார், கந்தசாமிக் கவிராயர், பாண்டித் துரைத்தேவர்போன்றகலைத்துறை மூற்றியபண்டிதப்

பெருமக்களின் கருத்துக்களே அதனை அழகுறச் செய்தன. அதன் உரைநடையே பழந்தமிழ் நடையாகும். சிறிது கடுமையான நடையென்றே இக் காலத் தமிழை நோக்கக் கூறலாம். சான்றோர் களால் நடத்தப்பட்ட அச் செந்தமிழ்ப் பத்திரிகை யில் 'வெள்ளைப் பாட்டு' எனச் சிலரால் எண்ணப் பட்ட கவிமணியின் கவிதைகள் தொடர்ந்து வெளி யாயின. இச் செய்தி ஒன்றே அக்காலத்திலேயே கவிமணி பண்டிதராலும் பாமரராலும் பாராட்டப் பட்டார் என்பதை விளக்கிக் காட்டும்.

செட்டி நாட்டினின்றும் வெளிவரும் சிறந்த பத்திரிகை "குமரன்' எனும் வார இதழாகும். கலை யும் சைவமும் வளர்த்த வணிகர்குல மக்களின் ஆதரவு தாங்கிய இவ்வாரப் பத்திரிகைக்குக் கவி மணி செய்த சேவை மிகச் சிறந்ததாகும். தமிழ கத்தே இன்று புகழ்பெற்று, இல்லங்கள் தோறும் மலர்ந்து நிற்கும் பத்திரிகைகள் பல தோன்றாத அந் நாளிலே குமரன் ஒன்றே செந்தமிழ்ப் பணியாற்றி வந்தது. இதன் ஆசிரியர் திரு சொ. முருகப்பா கவிமணியின் கவிதைகளைக் குமரனில் வெளியிட்டுக் களித்தார். தேசிக விநாயகர் கவிமணியாவதற்குக் காரணமான கவிதைகளை எழுத ஊக்குவித்த அன் பர்களில் ஒருவர் திரு. சொ. முருகப்பா ஆவர். திரு. முருகப்பா கவிமணியைக் கண்டு கவிதைகள் எழுதுமாறு வற்புறுத்துவார். எழுதிய பாடல்களை அழகாகக் குமரனில் வெளியிடுவார். ஆசியஜோதி யின் பல பகுதிகளும், வேறு பல கவிதைகளும் குமர

னுக்கு அழகளித்துத், தமிழர் மனத்துக்கு இன்ப மளித்தன. சீர்திருத்தக் கருத்துக்களுடன் சிறந்து விளங்கிய குமரனைக் கவிமணி,

> "வாக்கின் நயம் கண்டும் மறிக்கும் பொருள் கண்டும்
> ஊக்க நடைகண்டும் உளமகிழ்ந்தோம்—ஆக்கமிகு
> செந்தமிழ்'நா(டு) ஆளவரும் செல்வக் குமரநீ
> சந்ததமும் வாழ்க தழைத்து"

எனப் பாராட்டினர்.

கவிமணியின் கவிதைப் பெருமை தமிழ் நாட்டிலே ஆற்றுவெள்ளம் போலப் பரவத் தொடங்கியது. பத்திரிகையாளர் பலரும் கவிமணியின் பாட்டைப் பெறப் போட்டியிட்டனர். ஒருவருக்கொருவர் முந்தி நின்றனர். இன்று பெரும் புகழும் பெற்று விளங்கும் பல பத்திரிகைகளும் கவிதை பெற கவிமணிக்கு விண்ணப்பித்த வண்ணமாய் இருந்தன. தேவியின் கவிதைகள் அட்டைப் படமாகவும், பத்திரிகையின் முதற்பக்கமாகவும், மூவண்ணப் படங்களுடன் பொலிந்தன. அவரைப் பல கோணங்களிலிருந்து படம் பிடித்துப் பல்வகை வடிவிலே வெளியிட்டனர். கவிமணியின் உமர்கய்யாம் பாடல்களிற் சிலவற்றைக் கண்ட சக்தி திரு. கோவிந்தன் அந்நூலை முற்றிலும் தமிழாக்க வேண்டினர்; அதற்கு வேண்டிய பல ஆங்கிலப் பதிப்புகளை அவருக்கு அனுப்பி யுதவினர். திரு. கோவிந்தனர் 'சக்தி, உமர்கய்யாத்தை மொழிபெயர்த்து முடிக்கும் சக்தியைக் கவிமணிக்குக் கொடுத்தது.

திருவனந்தபுரத்தே கவிமணி பணிபுரிந்தபோது அங்கிருந்த சைவப் பிரகாச சபைக்கு ஞாயிறு தோறும் செல்வார். அங்கு வழக்கறிஞர் வையாபுரிப் பிள்ளை, நீதிபதி சேஷய்யர், இசைச் செல்வர் இலக்குமணப் பிள்ளை, அறிஞர் சிவராஜபிள்ளை, கம்பராமாயண குமரேச பிள்ளை ஆகியோர் வருவர். திருக்குறள் போன்ற இலக்கிய ஆராய்ச்சி இவ்வறிஞரிடையே நிகழும். கருத்து மாறுபாட்டால் ஒருவருக்கொருவர் விவாதம் முற்றிவிடும். வெளியே செல்வோரும் பேரோசை கேட்டுச் சபைக்குள்ளே சில முறை சென்று பார்த்ததுண்டு. எனினும், வெளிவருங்கால் இப்பெருமக்கள் ஆன்றவிந்தடங்கிய சான்றோராய் அகமும் முகமும் மலர்ந்தே வருவர்.

1926—1936-ம் ஆண்டு வரையிலும் சென்னைப் பல்கலைக் கழகத்தே தமிழ்ப் பேரகராதி வெளியிடும் பணி நடந்து வந்தது. அறிஞர் பலர் அதில் பங்கு கொண்டனர். ஆங்கில மொழியிலே அமைந்துள்ள 'லெக்ஸிகன்' போன்று தமிழிலும் அமைய வேண்டும் என்பது பலரின் அர்வமாக இருந்தது. இப்பெரும்பணியில் கவிமணியும் ஈடுபட்டுப் பேரகராதியின் கௌரவ ஆசிரியராய் அமர்ந்து தொண்டு புரிந்தார். கல்வெட்டு ஆய்வினால் கண்ட உண்மைகளும், பழந்தமிழ் இலக்கிய இலக்கண அறிவும், மேனாட்டு இலக்கியப் பெருஞானமும். கவிமணிக்கு இப்பேரகராதித் தொண்டிற்குச் சிறந்த வகையில் உதவின. ஏனையோர் காணாத நுட்பப் பொருளைத் தக்க சான்றுகளுடன் கவிமணி காட்டினார். பேரகராதிப் பதிப்புத் தலைவராக

இருந்த திரு. எஸ். வையாபுரிப் பிள்ளைக்கு திவாகரம், கம்ப ராமாயணம், நவநீதப்பாட்டியல் முதலிய ஏட்டுப் பிரதிகளைக் கவிமணி கொடுத்துத வினார்.

'வெற்றி கொண்டான்' பாடிய 'திவான் வெற்றி' எனும் வரலாற்று இலக்கியத்தை டி. கே. ஜோஸப் என்பாருக்குக் கொடுத்து அது வெளிவர வேண்டிய உதவிகளையும் கவிமணி செய்தார்.

திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பாடக் குழுவின் உறுப்பினராக இருந்து பணியாற்றி னார். இந்நாட்டு அரசாங்கத் தமிழ்ப் புத்தகங்களைத் திருத்தும் குழுவில் இருந்தும் தொண்டு செய்தார். தவறான மொழி நடையைத் திருத்தினார். குழந்தை கள் உள்ளம் கொள்ளத்தக்க முறையில் நூல்கள் உருவாக வழி காட்டினார். மாணவர் மனங்கவரும் சித்திரங்களைச் சேர்க்குமாறு செய்தார். எளிய இனிய பாடல்கள் புத்தகங்களில் வெளிவரச் செய் தார். பழுதுற ஏற்பட்ட பாடங்களைத் திருத்தி அமைத்தார்.

வேறு பல பணிகளிலே கவிமணி ஈடுபட்டிருந்த வேளைகளிலும் கவிதை எழுதும் சேவையை அவர் எந்நாளும் மறந்ததில்லை. 'தமிழோடிசை பாடல் மறந்தறியேன்' என்ற அப்பர் வாக்கு கவிமணிக்கும் ஏற்பதாகும். கலைமகள் என்றும் அவருக்குக் கருணை காட்டினாள். கவிதை மகள் ஓயாது அவர் நாவிலே நடம் புரிந்தாள். ஞான மகள் புத்தேரிக் கவி

மணியை நன்கு தழுவிக்கொண்டாள். அவரது பேச்சும் மூச்சும் கவிதையாய் மிளிர்ந்தன. உள்ளமும் உயிரும் கவிதையில் ஊறின. வாழ்வும் வளமும் கவிதையில் வளர்ந்தன. பழக்கமும் பண்பும் பாட்டிலே ஓங்கின. கவிமணியே கவிதை, கவிதையே கவிமணி என்ற நிலை தோன்றியது. உண்பதெலாம் கவிதை; உடுப்பதெல்லாம் கவிதை; இன்பத்தும் துன்பத்தும் கவிதை என அவர் எழுதினார். களிப்பிலும் கவிதைகள் எழுந்தன. சோகத்திலும் பாடல்கள் குமுறிப் பொங்கின. பிறப்பிலே அவர் கவிதைகள் பிறந்தன. பிறர் இறப்பிலேயும் கவிதைகள் மலர்ந்தன. கவிதை மயமாய்க் கவிமணி ஆயினார். உணர்ச்சியிலே கவிமணி மூழ்கும்போதெல்லாம், கவிதைகள் எழுந்தன. பற்பல நிலைகளிலிருந்து அவர் பாக்கள் தோன்றின. அவ்வாறு வெளியான பல நூற்றுக் கணக்கான பாடல்கள் தமிழருக்கு உண்ண உண்ணத் தெவிட்டாத சுவைமிகு கவியமுதாய் வெளிவந்தன. 'மலரும் மாலையும்' மருமக்கள் வழி மான்மியம், இளம் தென்றல், காதல் பிறந்த கதை, ஆசிய ஜோதி, உமர் கய்யாம், தேவியின் கீர்த்தனைகள் முதலியவை கவிமணியின் அழியாத மக்கள்; தமிழரின் மறையாச் செல்வங்கள்; கவிதை வானிலே மிளிரும் ஒளிப் பிழம்புகள்.

பாரதியாரிடத்தே கவிமணிக்கு இருந்த மதிப்பும் ஈடுபாடும் எல்லையற்றவை. 'பாட்டுக்கொரு புலவன் பாரதியடா' எனத் தொடங்கி, உள்ளம் கவர்ந்து துள்ளும் கவிதைகளே அவரது ஆழ்ந்த அன்பை விளக்கும். பாரதி மண்டபம் உருவான

போது அதன் திறப்பு விழா நிகழ்த்த கவிமணி சென்றார். மதுரை மண்டபத்தை திறந்து வைத்த கவிமணி.

"பாரதியார் நாட்டில் தூங்கிக் கிடந்த தமிழர் களைத் தட்டியெழுப்பிச் சுதந்திர தாகத்தை ஊட்டி னார்; பேரறிஞன்; தியாகி; மகான்; எளிய நடை யுடைய அவர் பாடல்கள் எளிதில் மனதில் பதியும்; விளக்கமும் உரையும் வேண்டுவன அல்ல.

பாரதியார் இறக்கவில்லை; உயிருடன் இருக் கிறார்; அவர் அமரன்; ஒவ்வொருவர் உள்ளமும் அவருக்கு நிலையம்; நான் திறக்கும் பாரதி நிலையம் ஓர் மின்சார நிலையம். இதிலிருந்து சக்தி கிளம்பி மக்களிடம் பரவ வேண்டும். இது உலகமெங்கும் ஒளியை நல்கும். பைந்தமிழ் வாழ்க; பாரதியார் வாழ்க" என வாழ்த்தினார்.

நாஞ்சில் நாட்டு நாகர்கோவிலில் கல்லூரி ஒன்று நிறுவ வேண்டுமென அந்நாட்டு மக்கள் எண்ணினார்; அதற்கென கவிமணியைக் கலந்தபோது அவர் களைப் பல்வகையிலும் ஊக்கிக் கல்லூரி உருவாக வேண்டிய உதவிகளையும் வழங்கினார்.

நாஞ்சில் மக்களின் கலையுள்ளம் போல ஓங்கி நின்றது இந்தக் கல்லூரி. அதனைத் திறக்கத்தக் கார் தமிழகத்து மக்கள் உள்ளமெலாம் கவர்ந்த கவிமணியே என நாட்டவர் நினைத்தனர். கல்லூரி யின் திறப்பு விழாவை நிகழ்த்திய கவிமணி.

"நாஞ்சில் மக்களின் கலையுள்ளம்போல் ஓங்கி நிற்கும் கல்லூரியைக் காண என்னுள்ளம் களிக்

கிறது. கலைமகள் கொலு வீற்றிருக்கும் இக்கல்லூரியில் இந்நாட்டு மக்களின் இதயமே நிழலிடுகிறது; நாஞ்சில் நாட்டு இளைஞர், கல்லூரி தேடி வெளியிடம் சென்று இடம் பெறாதும் பலர் மீண்டதுண்டு. செல்வரும் அறிஞரும் சிறந்து வாழும் நாஞ்சில் நாட்டிலே இக்குறையை நீக்க முன் வந்த பெரு மக்களைப் பாராட்டுகிறேன். இக்கல்லூரி பெரும் பல்கலைக் கழகமாக எளிதில் விரைவில் மாறவேண்டும். வேற்று நாட்டவரும் விரும்பிக் கலை பெறுதற்குரிய கலை நிலையமாக இது வளரவேண்டும். எண்ணியார் திண்ணியராகப் பெறின் எண்ணிய எண்ணியாங்கு எய்துவர். எனவே இது நமக்கு அரிதன்று. ஊர்தோறும் ஒவ்வொரு கல்லூரி காணவேண்டும். இது நம் கடமை" என ஊக்கமும் ஆக்கமும் அளிக்கும் வகையில் உரை நிகழ்த்தினர்.

"தேசிக விநாயகரின் சேவடியைச் சேவித்து
வாசமலர் தூவி வணங்குகிறேன்—மாசிலா
இந்துகலா சாலைவளர்ந்திந் நாகை நன்னகரில்
சந்ததமும் வாழவரம் தா"

என அவர் அத்தருணத்தே வாழ்த்தினர். தேசிக விநாயகர் எனப் பாடலிலே குறிக்கப்பட்ட பெயர் கோட்டாற்றுச் செட்டித் தெருவில் குடிகொண்ட விநாயகரைக் குறிப்பதாகும். தேசிக விநாயகரே கவிமணியின் குலதெய்வமாகவும் விளங்கினர்.

திருவிதாங்கூரில் தமிழர்கள் வாழும் தென் பகுதி தாயகத் தமிழ் நாட்டுடன் சேரவேண்டு

மென்ற ஆர்வம் உடையவர் கவிமணி. சென்னை இராஜ்யத்தினின்று வரும் அரசியல் தலைவர்களிட மும், அருந் தமிழறிஞர்களிடமும் இதுபற்றித் தம் கருத்தை எடுத்துரைப்பார். தாயகத்தோடு சேர்தற் குரிய ஏதுக்களைக் கூறுவார். பழம்பெரு நாட்டின் ஒரு பகுதியாகவே நாஞ்சில் முதலிய தமிழ்ப் பகுதி கள் இருந்தன என்பதற்கு ஆதாரங்களும் சான்று களும் காட்டுவார். சாசனங்களும், சரித்திரமும் இலக்கியமும் இதற்குத் துணையாகக் கொள்வார். அங்கு வாழும் மக்கள் பழக்க வழக்கமும், நடையுடை பாவனையும், பண்பாடும் தமிழினத்துக் குரியனவே என்பதை விளக்குவார். நடைபெறும் மாநாடுகளி லும் கூட்டங்களிலும் கவிமணி இதைப்பற்றி வற் புறுத்துவதுண்டு. 1948-ம் ஆண்டு நாகர்கோவிலில் மூன்றாவது தமிழ் எழுத்தாளர் மாநாடு நடைபெற் றது. அதில் கவிமணி தனது வரவேற்புரையில் நாஞ்சில் நாட்டின் பழைய வரலாற்றைச் சரித்திரச் சான்றுகளுடன் பேசினார். அன்றியும் 'தமிழர்கள் பழந்தமிழ்ப் பெருமை பேசி வாளா இருத்தல் தவறு. என் தந்தை கப்பலோட்டி எனக் கூறி மைந்தன் இரந்துண்டலால் வரும் நன்மை யாது? சங்க இலக் கியங்களும் தொல்காப்பியம் போன்ற இலக்கணங் களும் உள்ளன என இறுமாந்து இருந்துவிடல் ஆகாது. ஏனைய மொழிகளைச் சிந்திக்க வேண்டும். அடுத்துள்ள மலையாளம் காற்றினும் கடுகி வளர் கிறது. கனிதெலுங்கோ மனோ வேகமாக வளர்கின் றது. இந்தி மொழியோ அரசியல் ஆதரவால் பாரத நாடெல்லாம் பரவுகிறது. மேனாட்டு ஆங்கிலமோ

உலக மொழியாய் நிலவுகிறது. எனவே பழந்தமிழ்ப் பெருமை பேசுதல் மட்டும் எழுத்தாளர் நிலையையோ, தமிழின் வளர்ச்சியையோ காட்டிவிட முடியாது. புத்தம் புதிய கலைகள் தமிழில் தோன்ற வேண்டும். எல்லாக் கருத்துகளையும் எடுத்துக் கூறும் வகையில் மொழியை வளர்த்து வரவேண்டும். நில நூல், வான நூல், உள நூல், உடல் நூல், தாவர நூல், தத்துவ நூல் முதலியன தமிழில் பெருகவேண்டும் என்னும் கருத்துப்படப் பேசினார்.

1950-ம் ஆண்டில் கன்னியாகுமரியில் தென் குமரி எல்லை மாநாடு நடைபெற்றது. தாயகத் தமிழ் நாட்டுடன் தென் திருவிதாங்கூர்ப் பகுதிகள் சேர வேண்டுமென்ற நோக்கத்துடன் நடந்த இம்மாநாட்டில் கவிமணி தமிழ் மக்கள் கடமையை வற்புறுத்தினார். தமிழக மக்களின் உணர்ச்சியைப் புறக்கணித்து நிற்கும் அரசாங்கத்துக்கு எச்சரிக்கை ஒன்று விடுத்தார்.

“திருவிதாங்கோட்டுத் தமிழர்கள் தாய்த் தமிழகத்தோடு இணைய விரும்புகின்றார்கள். தமிழ் நாட்டாரும் இவரைச் சேர்த்துக்கொள்ள ஆசைப்படுகின்றார்கள். இந்த நிலையில் இவ்விரு சாரரையும் இணைத்து வைப்பதே ஆளும் அதிகாரிகளின் கடமை” என அவர் கூறும் மொழிகள் கவிமணியின் அமைதியும் நீதியும் கலந்த தமிழார்வத்தை விளக்கமாகக் காட்டுகிறது.

திருச்சி வானொலி நிலையத்தார் கவிமணியைக் காண வந்தனர். ‘என்னை இயக்கிய இலட்சியம்’

என்பது பற்றி நிருபர் கேள்விகளுக்கு அவர் விடையளித்துள்ளார். அவ்விடை விடைகளால் கவிமணியின் கொள்கை, பரந்த உள்ளம், அன்பு, தமிழார்வம் முதலியன விளங்கும்.

இவ்வாறு கவிமணி தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் செய்த தொண்டு என்றும் அழியாத நிலையிலே நிலவுகிறது. தமிழகம் வாழும் வரையிலும், கவிமணி தேசிக விநாயகர் செய்த சேவையை மக்கள் மனங்கனிந்து வாழ்த்துவர் என்பதற்கு ஐயமும் உண்டோ?

## 11. கவிமணியைப் பாராட்டிய தமிழகம்

புலவர்களும் அறிஞர்களும் கவிஞர்களும் வாழும் நாளில் பொன்னையும் புகழையும் பெரும்பான்மையும் பெறுதல் இல்லை. மேலை நாட்டுப் புலவர்கள் பலர் தமது அழியா எழுத்தோவியங்களைக் கரத்திலேந்தி நாடெல்லாம் திரிந்த கதை உண்டு. தமது சிறந்த காவியங்களைக் குறைந்த பொருளுக்காய் விற்றதும் உண்டு. இது தமிழ் நாட்டிற்கு மட்டும் விதிவிலக்கன்று. தமிழரின் பொற்காலம் எனப் போற்றப்படும் சங்க காலத்தே ஒட்டிய வயிறும், ஒடுங்கிய முகமும் குழிவிழுந்த கண்களுமுடையராய்ப் புலத்துறை முற்றிய புலவர்கள் மன்னரையும் மற்றோரையும் நாடியடைந்த செய்தியை மறைக்க முடியாது. காலஞ்சென்ற கவிஞர் பாரதி கடன் குழியில் வீழ்ந்து கலங்கியதை அவரது நாட் குறிப்பு தெரிவிக்கும். தங்கி வாழ்ந்த இல்லக் குடிக்கூலிக்கும், எண்ணெய்க்கும், விறகுக்கும், அரிசிக்கும், உப்புக்

கும் பணம் கொடுக்க முடியாது அவர் பரிதவித்த துண்டு. அவர் மாண்ட பின் மாண்டாராயினர். அவருக்கு மண்டபம் எழுந்தது. பாரதி கவிச்சக்கர வர்த்தியாகக் காட்சியளிக்கிறார். இந்நிலையே புலவர்க் கெல்லாம் ஏற்பட்ட சாபமாயினும் கவிமணி இந்த விதிக்கு ஆளாகவில்லை. தமிழகம் அவர் காலத்தே விழித்துவிட்டது. புத்துணர்வு பெற்றுப் பொலிந்து வரும் தமிழ்நாடு தேசிக விநாயகரைக் கவிமணியாக அவர் வாழும்போதே கண்டு மகிழ்ந்தது. அவரை வாழ்த்தியும் வணங்கியும் தானும் வாழ்ந்தது.

1943-ம் ஆண்டு மே மாதம் 11—12-ம் நாட்களில் ஆத்தங்குடி அழகுடன் பொலிந்தது. அங்கு விரிவாய் அமைக்கப்பட்ட மண்டபத்தே தமிழ் நாட்டுப் பேரறிஞரும், செல்வர்களும், செட்டிநாட்டுத் தலைவர்களும் குழுமி இருந்தனர். மகிழ்ச்சியும் ஞானமும் தவழும் அம்மணி மண்டபத்தே தேசிகவிநாயகர் அழைத்துச் செல்லப்பட்டார். பல்லோர் வாழ்த்திப் பாராட்ட பொன்னாடையைக் கவிமணிக்கு அண்ணாமலை மன்னர் அணிந்தார், கவிமணியைக் குறித்து

“ இன்று நாம் போற்றிப் பாராட்டும் ஸ்ரீமான் பிள்ளையவர்களுக்குத் தமிழ் நாடு மிகவும் கடமைப்பட்டிருக்கின்றது. தற்காலத்தில் தமிழர் விரும்பும் நடையில் சிறந்த பாடல்கள் இயற்றிய தமிழ் இலக்கியத்துக்கும் இசைக்கும் அரும்பணி புரிந்து வரும் இவர்கள் இனி வரும் இளம் புலவர்களுக்கு நல்ல உதாரணமாக விளங்குவார் என்பதில் சந்தேகம் இல்லை.

இக்கவிஞர் ஏறக்குறைய எழுபது வயதுள்ளவர்களாயினும் தமிழ் மொழிப்பற்றிலும் தொண்டிலும் சிறிதும் தளர்ச்சியின்றி இளைஞருக்குரிய ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் உழைத்து வருகின்றார்கள். இப்பெரும் புலவருடைய பாராட்டுக் கூட்ட வைபவத்தில் நானும் கலந்து கொண்டிருப்பதனால் எனக்குண்டாகியிருக்கும் சந்தோஷத்துக்கு அளவே இல்லை" என அவர் பேசிய மொழிகளால் அண்ணாமலை மன்னர் கவிமணியிடம் கொண்டிருந்த அன்பையும் மதிப்பையும் நன்கு அறியலாம்.

1944-ம் ஆண்டில் திருநெல்வேலியிலுள்ள திருவாளர்கள் பாஸ்கரத் தொண்டமான், அ. சீனிவாச ராகவன், ஆ. முத்துசிவம், கு. அருணாசலக் கவுண்டர் போன்ற தமிழறிஞர்கள் கூடிக் கவிமணியைச் சிறப்பிக்கக் கருதினர். நெல்லையிலிருந்து புத்தேரி சென்று அவரை நெல்லைக்கு அழைத்து வந்தனர். கவிமணியின் பண்பையும், கவிதைகளின் அழகையும் சிறப்பித்துக் கவிஞர் பலரும் பேசினர்.

அவ்வாண்டிலேயே புத்தேரிப் பள்ளியில் கவிமணியின் 69-ம் வயதில் அவரைச் சிறப்பிக்க திரு ராமசுப்பய்யர் தலைமையில் ஓர் கூட்டம் கூடியது. பல நூற்றுக் கணக்கான நாஞ்சில் நாட்டுத் தமிழன்பர்கள் நகரத்திலே ஊர்வலமாக வந்து கவிமணியின் இல்லம் அடைந்து அவருக்கு வாழ்த்தும் வணக்கமும் தெரிவித்தனர், சிறுமியர் சிலர் ஒன்றுகூடி கவிமணிக்கு மலர்மாலை சூட்டி 'மாலை சாற்றி வாழ்த்துவோம்' என்னும் மதுர கீதத்தைப் பாடினர். பாட

லைக் கேட்ட கவிஞர் உள்ளம் உருகியது. கவிமணி யின் கண்களில் மகிழ்ச்சியும் அன்பும் கலந்த கண் ணீர் நிறைந்து நின்றது, மக்களை நோக்கி 'நீங்கள் அனைவரும் நீடு வாழ்வீராக!' என நெஞ்சம் குழைந்து வாழ்த்தினர். மாலையில் நிகழ்ந்த கூட்டத்தில் அரசி யல் அறிஞர்களும். அருந்தமிழன்பர்களும் கலைஞர் களும் கவிமணியின் பண்பு பற்றியும் அவர்தம் பெருமைப் பற்றியும் பேசினர்.

1945-ம் ஆண்டில் கவிமணியின் எழுபதாவது ஆண்டுவிழா நாகர் கோவிலில் நிகழ்ந்தது. அவ்வம யம் நீதிபதி சத்தியநேசன் தலைமை தாங்கினர். திரு பாஸ்கரத் தொண்டமான், அ. சீனிவாச ராகவன் முதலிய தமிழ்ப் பேராறிஞர்கள் கவிமணியின் சிறப் பைப் பற்றி அழகுறச் சொற்பொழிவாற்றினர். பல பாராட்டுரைகள் கவிதையிலும் உரைநடையிலும் வாசித்து நல்கப்பட்டன. இக்காலத்தே கவிக்குயில் நிலையத்தார் 'கவிமணி மலர்' ஒன்று வெளியிட்ட னர். 'தேவி' என்னும் மாத இதழும் ஒரு தனி மலர் வெளியிட்டுக் கவிமணியைப் பெருமைப் படுத்தியது.

கவிமணி பிறந்த தேரூர் மக்கள் அவருக்குச் சிறந்தவகையில் பெருமைப்படுத்தச் சிந்தித்தனர், பெருந்தொகையில் கட்டிடம் ஒன்று எழுப்பினர். அதற்கு கவிமணி நூல் நிலையம் எனப் பெயரிட்டுப் பெரியதொரு நூல் நிலையமாக்கினர்.

நாகர்கோவில் நகரில் கவிமணி நிலையம் ஒன்று உருவாகிவருகிறது. தமிழகத்து அன்பர்கள்' அனை

வரும் இதில் பொருளாலும் பிறவழியாலும் உதவி யுள்ளனர்.

இம் முறையில் பொன்னுடை போர்த்தியும், பூமாலை சாற்றியும், மலர் வெளியிட்டும், நிலையங்கள் நிறுவியும் கவிமணிக்குத் தமிழகம் சிறப்புச் செய்தது. இறந்த பின் பல புலவர்கள் எய்தும் சீரையும் சிறப்பையும் அவர் வாழ்ந்த காலத்தே பெற்றார். இத்தகைய நிலையில் விழிப்படைந்த தமிழகத்தை நாம் வாயார வாழ்த்துவோமாக!

## 12. கவிதைச் சிறப்பு

உண்மைக் கவிஞன் உணர்ச்சிச் சுனையில் கவிதைகள் மலர்கின்றன. வாழ்வில் அவன் கண்ட அழகிய காட்சிகள், அனுபவித்த நிகழ்ச்சிகள், எண்ணிய சிந்தனைக் குவியல்கள், ஆகியவை அனைத்தும் அவன் மனத்திரையில் ஓவியங்களாய் ஒளிவீசுகின்றன. காலத்தின் கோடுகளும், அமைதியின் பெருக்கமும், ஆர்வத்தின் எழுச்சியும் அவனைத் தாக்கும்போது அவன் இதய வீணையிலே உணர்ச்சி நரம்புகள் இசை பாடுகின்றன. இலக்கணத்துக்கு அந்நிலையில் அவன் ஏகுவதில்லை. மொழிகளுக்காக அகராதியை ஆராய்வதில்லை. சீரும் தளையும் அமைக்கச் சிந்திப்பதில்லை. அணியழகு சூட்ட அவன் கருதுவதில்லை. ஏற்ற மொழியும் இனிய ஒழுக்கும் அவனைத் தாமே வந்து தழுவுகின்றன. இவற்றின் இணைப்பால் கவிதைக்கனி உருவாகிறது. உள்ளத்து உதித்த உணர்ச்சி ஓவியங்கள் மொழிகளில் ஒலி

ஓவியமாய்க் கற்பார் கருத்தைக் கவர்கின்றன. இக் கவிதைகளிற் சில தெளிந்த சுனையின் குளிர்போலத் தோன்றும்; மலர்மிசை அலையும் தென்றல்போல் வருடும் சில. தீயின் வெம்மையையும் திங்களின் தண்மையையும் மலையின் உறுதியையும், மறி கடலின் விரிவையும் சில விளக்கி நிற்கும்.

கண்ட காட்சிகளைக் கவிஞன் பார்த்த அன்றே கவிதையாய் அமைத்து விடுவான் என்பதில்லை. உணர்ச்சிகள் உதித்தபோதே அவன் அதன் வயப் பட கவிதைகள் பொங்கி எழுதலுண்டு. காணும் காட்சிகள், அவன் சிந்தனைச் சாணையில் தேய்க்கப் பெற்று ஒளி வீசிக் கவிதையாய்ப் பொலியும். விண்ணிலிருந்து கடற் சிப்பியில் வீழும் பனித்துளி முத்தாக உருப்பெற்று முன்னினும் பின் எவ்வாறு சிறந்து சுடர் வீசுகிறதோ அவ்வாறே கவிதையும் கவிஞரது அறிவாலயத்தில் தங்கப்பெற்று அற்புத நடனம் புரிவதைக் காணலாம். இத்தகைய அரிய கவிதைகளை உயிர்க்கும் கவிதை உள்ளம் வாய்ந்தவரே நமது கவிமணியவர்கள்.

இயற்கையே இறைவன்; இறைவனே இயற்கை; எனவே இயற்கையைப் பாடிய கவிமணி அதன் வாயிலாக இறைவன் உண்மையை இனிதுறக் காட்டுகிறார்.

கவிமணி கடவுட் பற்று மிக்கவர்; ஆயினும் புராண இதிகாசக் கருத்துக்களை அப்படியே ஏற்றுக் கொள்ளும் இயல்பினரல்ல; அவற்றினிலே மனிதப் பண்பைக் கண்டு தத்துவத்தை ஆய்ந்து தெளிவார்.

இவர் அழகை ஆராதித்தவர்; பழந்தமிழர் இயற்கையிலேயே இறைத் தன்மையைக் கண்டதுபோலக் கவிமணி அமைதி மிக்க அழகிலே மூழ்கி அவ்வீடு பாட்டில் ஒன்றி இறைவனைக் கண்டவர். இவ்விதயப் பண்பைக் கவிமணியின் கவிதைகள் நன்கு காட்டுகின்றன.

நாஞ்சிலின் தென்னெல்லையாய் விளங்கும் குமரியை அழகின் எல்லையென்றே கூறவேண்டும். இந்த எழில் உலகத் தடாகத்தில் மலர்ந்த ஆர்வத்தின் உருவம் இத்துறை. பாரத அன்னையின் பாதம் போன்ற இவ்விடத்தில் கன்னிக்குமரி எந்நேரமும் அமுத கீதம் பாடி மனித இதயத்திலே பற்பல கற்பனைகளை, இன்ப நினைவுகளை எழுப்பிய வண்ணமிருப்பாள். பவழங்களையும் முத்துக்களையும் பன்னிறச் சோழிகளையும் பாரத அன்னைக்குக் காணிக்கையாக அள்ளிப் பொழிவாள்.

"நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்
வெண்டலைப் புணரிநின் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந"

எனும் புறப்புலவர் கருத்தை விளக்கி உதய ஞாயிற்றின் தோற்றத்தையும் அது மறையும் காட்சியையும் ஓரிடத்தே காணுமாறு நிலவுவது இக்குமரித் துறை ஒன்றே.

ஓர் நாள் காலை இளஞாயிறு எழுந்தோற்றத்தைக் குமரியிலே கண்டு நிற்கிறார் கவிமணி. அலைகள் குழந்தைகள்போல் துள்ளிக் குதித்துக் கும்மாளமடித்தவண்ணமிருந்தன. ஒளியும் கடல் முற்றும்

பரவத் தொடங்குகிறது. கடல் குமரி ஒளியமுதை உண்டு புன்னகை புரிந்து நின்றாள். பரந்த கடலில் நிறைந்த ஒளியைப் பார்த்ததும் கவிமணிக்கு அன்னை பராசக்தி காட்சி முன் வருகிறது. அந்த அன்னையின் அருள், ஒளி மயமாகக் காட்சி தருவதாகக் கருதுகிறார். இவ்வுணர்ச்சியிலே மூழ்கி

"முற்றிய ஆழியிலே அலைவந்து
மோதி எறிகையிலே
கற்றைக் கதிர் எழவே—உமை திருக்
காட்சி வியப்பேனடி"

எனக் கவிதை இசைக்கிறார்.

மற்றொரு சமயம் கவிமணி பசுமை செழிக்கும் தினைப்புனத்தைக் காண்கிறார். அப் பயிர்களில் கதிர்கள் நன்கு முற்றிச் செழித்துக் குலுங்கி நிற்கின்றன. புடைத்துத் தாழும் கதிர்களை நாடி கான மயில்கள் கூட்டம் கூட்டமாக வருகின்றன. பச்சைத் தினைப் புனமும் நீல மயிலினமும் கண்ட கவிஞர்க்கு முருகன் நினைவு வருகிறது.

"மேட்டு நிலங்களிலே—தினைக்கதிர்
விம்மி விளைகையிலே
காட்டு மயில்வரவே—குகனும் என்
காதல் விளைப்பாரடி"

எனப பாடுகிறா.

இயற்கையிலே இறைவன் தவழ்ந்து வரும் இயல்பை,

“ வாசமெழு சோலைவாய் மதுவுண்டு
வண்டினம் மதுரகீதங்கள் பாட
மந்தமாருதம் வீச வேனிலிங்கின்றெனது
வாசலில் வந்தனையா
ஆசையொடு நின்னையெதிர் நோக்கியிவ்வுள்ளத்தில்
அமைதிபெற வீற்றிருந்தேன்
ஆவியை உனக்குரிமை யாக்கி
வழிபடுவதற்கான ஒரு தருணமிதுவே ”

என்ற வரிகளிலும் இவ்வுண்மையை விளக்க மாகக் காணலாம்.

போலித் துறவைக் கவிமணி வன்மையாகக் கண்டிப்பவர்; மொட்டையடிப்பதாலும், முழுநீறு பூசுவதாலும், காவியுடை கட்டுவதாலும் மட்டுமே கடவுளைக் கண்டுவிடலாம் என்று எண்ணலாகாது எனத் திண்ணமாகக் கூறுகிறார்.

“ நித்தம் நித்தம் நீராடில்
நிமலன் அருளைப் பெறலாமேல்
தத்தும் தவளை மீன்களும் அத்
தனிப் பேறடைய வேண்டாவோ ”

எனவும்,

“காசியிலே இறப்பதனால் பயனொன்றில்லை
காஷாயம் தரிப்பதொரு வேஷமேயாம்,
ஆசையினை வேருடனே அறுக்கவேண்டும்
அழியுமுடல் அபிமானம் அகற்றவேண்டும் ”

எனவும் அவர் பாடுவன என்றும் மறவாது மனத் திலே போற்றிக் கற்கத் தக்கன.

தாய்மொழிக்குக் கவிமணி செய்த சேவையைத் தமிழுலகம் நன்கறியும். பழந் தமிழிலக்கியங்களில்,

அவர் ஈடுபட்ட தன்மையை அவர் பாடல்கள் நன்கு காட்டுகின்றன. கற்றறிந்தார் போற்றும் கலித் தொகையை,

"கற்றவர் மெச்சும் கலித்தொகையாய் இன்பக்
கற்பனை சேரும் களஞ்சியத்தை"

எனக் கூறுகிறார்;

கம்பன் கவிதைப் பெருக்கத்தைப் பாற்கடல் எனக் கூறுகிறார், பாலை நினைக்கும்போது நாவில் நீர் ஊறுகிறது; மனம் அவாவுறுகிறது. வள்ளு வரின் தமிழ் மறையையும் இளங்கோவடிகளின் சிலம்பையும் கற்றுப் பேரின்பம் அடைகிறார் கவி மணி. அந்நூல்கள் அவர் உள்ளத்தை துள்ளிவிடு கின்றன. தெய்வமறைத் திருக்குறளைத் தமிழ் மாதின் 'உயிர் நிலை' எனக் கூறுகிறார்.

பாவின் சுவைக் கடல் உண்டெழுந்து கம்பன்
பாரிற் பொழிந்த தீம்பாற் கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே நாவின்
நன்னயம் முற்றும் தெளிகுவமே,

என்றும்,

"வள்ளுவர் தந்த திருமறையைத் தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே
என்றும் உத்தமராகி ஒழுகுவமே"

என்றும்,

"தேனிலே ஊறிய செந்தமிழின் சுவை
தேறும் சிலப்பதிகார மதை

ஊனிலே எம்முயிர் உள்ளளவும் நிதம்
ஓதி உணர்ந்து இன்புறுவோமே''

என்றும் வருவன அவரது தமிழ் நூல் ஆர்வத்தை நமக்கு எடுத்துக் காட்டுவனவாம்.

கவிமணி சோக உணர்ச்சியை உள்ளத்தைத் தொடுமாறு பல இடங்களில் பாடியிருக்கிறார். கற்பாருள்ளத்தைக் கரைவித்துக் கண்ணீர் சிதறச் செய்வன அவரது சோகக் கவிதைகள். 'குழந்தையின் முதல் துயரமே' படிப்பவரின் மனத்தைக் குழைத்துப் பிசைந்து வடிப்பதாகும். தன்னோடு விளையாடித் திரிந்த தம்பி மாண்டுபோகிறான்; அவனை மறுநாள் கேட்கிறான் சகோதரன். அவன் இறந்துபோனான் என்பது அவனுக்கு எப்படித் தெரியும்? இறப்பின் பொருளை அப்பிஞ்சு உள்ளம் அறியுமா? மீண்டும் வாரா வழியிலே தம்பி அகன்று விட்ட உண்மையை அறியும் வல்லமை அக் குழந்தைக்கு உண்டா?

முல்லை பூத்தது; இருவாச்சி மொட்டும் அலர்ந்தது. மல்லிகைப் பூவும் மணம் வீசியது. தும்பிபாடியது. சோலையை நாடியது சோதரனின் உள்ளம்; தன்னோடு விளையாடத் தம்பியைத் தேடுகிறான், தாயிடம் கேட்கிறான்.

'முல்லை பூத்ததம்மா இருவாச்சி
மொட்டலர்ந்த தம்மா
மல்லிகைப் பூவும் மலர்ந்து நல்
வாசம் வீசுதம்மா'

" தும்பி பாடுதம்மா கிளிபயில்
சோலை தேடுதம்மா
தம்பி எங்கே அம்மா விளையாடத்
தனியே நின்றேனம்மா "

என வினவுகிறான். தாயின் மறு மொழியையும் கூறுகிறார் கவிஞர்

"யாரழைத்தாலும் அவன் செவிக்கு
எட்ட மாட்டாதே
பாரில்நம்மை அவன் இனிவந்து
பார்க்க மாட்டானே
வாசமலரைப் போல் வளர்ந்தவன்
வாடி விட்டானே
ஈசன் சந்நிதியில் விளையாடி
இருக்கின் றனப்பா"

என ஆறுதல் கூறுகிறாள் தன் மகனுக்கு.

ரசிகமணி டி. கே. சி. யின் ஒப்பற்ற புதல்வர் திரு. செல்லையா எனும் தீர்த்தாரப்பர் கவிமணியிடம் பெரு மதிப்புக்கொண்டிருந்தவர். பிள்ளைப் பேரற்ற கவிமணி தன் மைந்தராகவே தீர்த்தாரப்பரைக் கருதி வந்தார். இத்தகைய செல்லையா மறைந்த செய்தி கவிமணி குமரித்துறையிலே இருக்கும் போது எட்டியது. அன்புடைய செல்லையா; வீட்டிற்கு வந்தபோதெல்லாம் என்னை ஊட்டி உபசரித்த செல்லையா, இசைத் தமிழ் வல்ல செல்லையா என ஏங்கி ஏங்கிக் கதறினார்; அவரது அழகிய வதனம், கவிமணியின் முன் தோன்றியது; அவர் சிரிப்பு வந்து காட்சியளித்து அவர் கருத்தை அழித்தது. நீல வானிலும் நெடிய அலைகளிலும், கோல

நீர்க் குமிழிகளிலும், மேகத் திரையிலும் தீர்த்தாரப் பர் வதனம் கவிமணிக்குத் தோன்றியது.

'எப்பாரும் போற்றும் இசைத்தமிழ்ச் செல்வாளன்
அப்பா! அழகிய செல்லையா!—இப்பாரில்
சிந்தை குளிரச் சிரித்தொளிரும் உன்முகத்தை
எந்த நாள் காண்பேன் இனி'

கவிமணி ஓர்நாள் வழக்கம்போல் தபாலைப்பிரித்துக்கொண்டிருந்தார்; ஓர் கடிதம் அவர் கரத்திலேயே இருக்கிறது; முகமோ வாடுகிறது; கண்களிலே நீர் நிறைந்து நிற்கிறது. அன்பர் ஒருவர் தம் அருமை மனைவியைப் பறிகொடுத்துவிட்டார். காலன் அவளைக் கவர்ந்துவிட்டான். சோகக் கடலிலே மூழ்கிய அவர் ஆறுதல் பெறத் தம் துயரத்தை யெல்லாம் கூறித் தாம் வெளியிட விரும்பும் மலருக்குக் கவிதை வேண்டிக் கவிமணிக்கு எழுதி இருந்தார். இக்கடிதமே கவிமணியின் நிலையை மாற்றித் துயரத்தே ஆழ்த்தியது. அன்பர் விருப்பை நிறைவேற்றும் வகையில் தாமும் ஆறுதல் பெறப் பாடுகிறார்.

மண்ணிலினிய வாழ்வினுக்கு
வாய்த்த நல்லதுணையென்ன
எண்ணியிருந்த மணவாளன்
ஏங்கிஏங்கி உளம்வருந்த
கண்ணிற் காணுவிண்ணுலகம்
கடந்து சென்றது ஏனம்மா!
வண்ணக்கிளியே மடமயிலே
மாதர்மணியே சகுந்தலையே.

எனும் பாட்டுக் கற்பவரையெல்லாம் **கண்ணீர்** உதிர்க்கச் செய்வது.

உலக ஞானி காந்தியடிகள் மாண்ட செய்தி மாலை நேரத்தே கவிமணிக்கு எட்டியது; இரவெல்லாம் தூக்கம் சிறிதுமில்லை. 'காராவின் கழுத்தை அறுத்து விட்டானே' என அலறினார். ஏங்கினார்; ஆறாக் கண்ணீர் வடித்து மாறாத் துயரத்தில் அழுந்தினார்.

"திடம்படைத்த கன்னெஞ்சும் திடுக்கிட்டு
நடுநடுங்கிச் சிதறிப்போக
மடம்படைத்த மாபாவிவஞ்சனையால்
காந்திமகான் மடியச்சுட்டான்
உடம்பனைத்தும் வாயாக அழுதாலும்
உறுதுயரம் ஒழிந்திடாதால்
இடம்படைத்த உலகாளும் இறையேநீ
எங்கொழிந்தாய் இந்நாள்ஐய!"

எனச் சோகச் சிகரத்தின் எல்லையை எய்திய அருந்தமிழ்ப் பாவைப் பாடி ஆறுதல் பெற முயன்றார்.

## 13. இறுதி நாட்கள்

கவிமணி அமைதியாகத் தம் வாழ்வை நடத்தி வந்தார். மலர்போல அவர் வாழ்வு மேடு பள்ளமின்றிச் சென்றது. ஆடாது அசையாது அமைதியாக இருக்கும் ஆழியின் நிலைபோல அறிவுப் பெருங்கடலாகிய கவிமணி இருந்து வந்தார். எனினும் 'அந்திம நாளிலே சில வாழ்க்கை அலைகள் மோதின;

துன்பக் குமிழிகள் தோன்றின; உடலமோ பிணிக்கு ஆளாகியது; அறுவைச் சிகிச்சையும் செய்யப் பெற்ருர்; உடலெல்லாம் ஏற்பட்ட எரிவின் காரணமாக 'இறைவனே! என்னை விரைவில் ஏற்றுக் கொள்ளாயா' என ஏங்கினர். இரவெல்லாம் பக்திச் சுவை ஒழுகக் கீர்த்தனைகள் பாடிப்பாடி அழுதார்; நெருங்கிய நேசர்கள் மறைந்தபோதெல்லாம் எனக்கும் இடம் பார்த்து வைப்பீராக என வேண்டி நின்ருர்.

படுக்கையிலே பல நாட்கள் தங்கும் பரிதாபநிலை ஏற்பட்டது; எத்தனையோ துன்பங்கள் அவர் இதயத்தே தோன்றின. ஆனல் அவற்றை எல்லாம் ஆண்டவன்பால் கொண்ட அழியா அன்பாலும், தமிழிடம் கொண்ட தாழா ஆர்வத்தாலும் மறந்து வந்தார். ஆவி பிரியும் வரையிலும் தமிழையே எண்ணி, தமிழையே பாடி, தமிழையே வாழ்த்தி, தமிழையே கேட்டு வந்த கவிமுகில் 1954-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 26-ம் நாள் இவ்வுலகை விட்டு மறைந்தது. கவிமணியின் பூதவுடல் மறைந்தது; கவிதையுடல் சாவா வரம் பெற்று மன்னும் இமயம் போலவும் மின்னும் பொதிகை போலவும் இன்று நிலவுகிறது. என்றும் நிலவும் என்பதில் ஐயமேது வும் உண்டோ!

★